# 5 mousefuls a day.




Introducing Schoolnetindia.com. A portal that combines knowledge and wisdom for kids, parents and teachers. It has study materials. A digital library. Lesson banks. Tutorials. Online testing. Projects. And e-stories, poems, advice on how to deal with special children, value education. In short, it is the perfect cyber brain-tonic for those who wish to learn about life.

**www.schoolnetindia.com**

SCHOOLNET

*Networked Learning* ™

*Technology. Content. Training.*

# அம்புலிமாமா



மதிமுகம் : 103 செப்டம்பர் 2000 புன்னகை : 3

## பொருளடக்கம்



## சிறப்புப் படைப்பாக

நாட்டின் திலகம் (வேதாளக் கதை)





ஒலிம்பிக்ஸ் சிறப்பு

அது உன் தவறே!





பாரதப் பண்பாடு-வரலாறு

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K Press Pvt. Ltd., Chennai–600 026 on behalf of Chandamama India Limited, Chandamama Buildings, Vadapalani, Chennai–600 026. Editor: Viswam

நீங்கள்

அயல்நாடுகளில்
உள்ள உங்கள்
உறவினர், நண்பர்களுக்கு



# அம்புலிமாமா

இதழை
அவர்கள் விரும்பும்
மொழியில் கொடுங்கள்

**அஸ்ஸாமி, வங்களாம், ஆங்கிலம், ஹிந்தி, குஜராத்தி, கன்னடம், மலையாளம், மராட்டி, ஒரியா, சம்ஸ்கிருதம், தமிழ், தெலுங்கு**

அயல் நாட்டிலும் தாய்நாட்டில் உள்ள
மகிழ்ச்சியை அவர்கள் அனுபவிக்கட்டும்

**சந்தா விவரம்**

எல்லா நாடுகளுக்கும் விமானத்தபாலில்
பன்னிரண்டு பிரதிகளுக்கு ரூ.900.

இந்தியாவில் தரைவழித் தபாலில்
பன்னிரண்டு பிரதிகளுக்கு ரூ.120.

நீங்கள் செலுத்தும் பணத்தை டி.டியில் அல்லது மணியார்டரில் 'சந்தமாமா இந்தியா லிமிடெட்' என்ற பெயர் எழுதி அனுப்பவும்

முகவரி :
**பதிப்பகப் பிரிவு**
**சந்த மாமா இந்தியா லிமிடெட்**
சந்தமாமா பில்டிங்ஸ்
வடபழனி, சென்னை - 600026.

ஆசிரியர்
**விஸ்வம்**

எல்லாக் கடிதப்
போக்குவரத்திற்கும்
சந்தமாமா
பத்திரிக்கைப் பிரிவு
சந்தமாமா பில்டிங்ஸ்
வடபழனி,
சென்னை - 600026.
டெலி/ பேக்ஸ்
4841778/4842087
ஈமெயில் சந்தமாமா
@விஎஸ்என்எல்.காம்
**மும்பை அலுவலகம்**
2/B நாஜ் பில்டிங்ஸ்
லாமிங்டன் ரோடு
மும்பை 400004
போன்:002-3887480
பேக்ஸ்:022-3889670

அமெரிக்காவில் தனிப் பிரதி
2டாலர்கள்வருடசந்தா:20டாலர்கள்
பணம் அனுப்ப வேண்டிய
முகவரி:
**இந்தியா அப்ராட்**
43, வெஸ்ட் 24வது தெரு
நியூயார்க், என்.ஒய்.10010
டெலிபோன் : (212)929-1727
பேக்ஸ் : (212) 627-9503

The stories, articles and designs contained in this issue are the exclusive property of the Publishers and copying or adapting them in any manner/ medium will be dealt with accoring to law.

## ஜுலை 2000 பாரத தரிசனப் போட்டியின் விடைகள்

அ) வர்த்தமான மகாவீரர், கௌதம புத்தர். இருவருமே அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்கள்.
ஆ) பாலி மொழியில்
இ) திரிபீடிகை
ஈ) அர்த்த–மாகதி
உ) பூர்வ அங்கமூலசூத்திரம்
ஊ) உஜ்ஜயினியின் மன்னன் பர்த்துருஹரி, பிங்களா தேவி



நிறுவியோர்
பி.நாகிரெட்டி சக்கரபாணி

# எங்கும் ஒலிம்பிக் பேச்சே!

புதிய நூற்றாண்டும் இரண்டாயிரமாவது ஆண்டுமான இந்த வருடத்தில் ஆஸ்திரேலியாவில் ஒலிம்பிக் விளையாட்டுப் போட்டிகள் நடக்கப் போவது பற்றியே உலகெங்கிலும் ஒரே பேச்சாக இருக்கிறது.

விளையாட்டுகள் உலகில் தொன்று தொட்டு உள்ளவை. இவை பற்றி மகாபாரதத்திலும் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால் விளையாட்டுகள் பற்றிய எழுதி வைக்கப்பட்ட வரலாறு கிரீஸில் ஏதன்ஸில் ஒலிம்பிக் விளையாட்டுகள் கி.மு.771ல் ஆரம்பமான போது தான் எனலாம். கி.பி.221ல் ஜுலியஸ் ஆப்பிரீகன்ஸ் கி.மு.776 லிருந்து கிபி.217 வரை பெயர் தெரிந்த விளையாட்டு வீரர்களின் பெயர்ப் பட்டியலைத் தயாரித்தார்.

ஒலிம்பியா தேவதையின் பெயரில் ஆரம்பிக்கப்பட்ட ஒலிம்பிக் போட்டிகள் புனிதமானவையாகக் கருதப்பட்டன. இவற்றில் வெற்றி பெற்றவர்களுக்கு ஆலிவ் இலைகளுள்ள சிறு கிளைகள் பரிசாக வழங்கப் பட்டன. இவ் விளையாட்டுகள் நட்பு முறையில் வெறுப்பில்லாமல் நடைபெற்று வந்தன. வெற்றி தோல்வி முக்கியமல்ல, விளையாடுவது தான் முக்கியம் என்ற உணர்ச்சியே யாவரிடமும் இருந்தது.

ஒலிம்பிக் விளையாட்டுப் போட்டிகள் 1896ல் மீண்டும் துவங்கப் பட்டது கூபர்டின் பிரபு என்பவரால். இதனை உலகே உற்சாகத்துடன் வரவேற்றது. மக்கள் விளையாட்டுகள் பற்றி ஆர்வத்துடன் பேசலாயினர். எதிலும் நேர்மையான விளையாட்டு வீரர் உணர்ச்சியுடன் இருக்க வேண்டும். இதைக் கருத்தில் கொண்டே ஒலிம்பிக் உறுதி மொழியில் ''இவ்விளையாட்டுகளில் நேர்மை தவறாமல் விசுவாசமாக விளையாட்டுகள் மேன்மையுற விளையாடுவோம்'' என்று தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. இந்த உணர்ச்சி நிலைத்திருக்கட்டும்.

# செய்திச்சுடர்



## விமானப் பயணம் பரிசு

சென்னைக்கருகே ஒரு பள்ளியின் பத்தாம் வகுப்பு தேர்வுகள் அறிவிக்கப்பட்டதும், பிருந்தா, பிரவீணா என்ற அதன் இரு மாணவிகள் தாம் எடுத்துக் கொண்ட பாடப்பிரிவுகளில் மிக உயர்ந்த மதிப்பெண்களைப் பெற்றனர். அவர்களுக்கு ரொக்கப் பரிசுகளும் மேற்படிப்பிற்கான உதவித் தொகைகளும் வழங்கப்பட்டன. மேலும் அவர்கள் ஹைதராபாதிற்கு விமானத்தில் போய் விடுமுறையைக் கழிக்க அப்பள்ளி ஏற்பாடும் செய்தது. இதற்கு காரணம் அவர்கள் கிராமப் பகுதிகளிலிருந்து வந்தவர்கள். இவ்விதம் அவர்கள் செல்வதால் அவர்கள் நகரமானவர்களுக்குச் சமமாக ஆக ஒரு வாய்ப்பு கிடைக்கிறது. இந்த வாய்ப்பு எல்லா நகர வாழ்க்கை மாணவர்களுக்கும் கிடைத்து விடுகிறதா? மேலும் இத்தகைய பயணங்களை வரலாற்றுச் சிறப்பு மிக்க இடங்களுக்கு ஒதுக்கினால் மாணவர்கள் பல புதிய விஷயங்களைத் தெரிந்து கொள்வார்களே! கல்வி நிறுவனங்கள் போட்டி போட்டுக் கொண்டு தம் பள்ளிகளில் உயர் மதிப்பெண்கள் பெற்று தேர்வு பெற்ற மாணவ மாணவியரின் படங்களை செய்திப் பத்திரிகைகளில் வெளியிடுகிறார் கள். இது எதற்கு எனவும் சிந்திக்க வேண்டும்.

## இனி பகைவர்களல்ல, நண்பர்களே!

டென்மார்க்கும் ஸ்வீடனும் தம் 400 வருடப் பகைமையைப் போக்கிக் கொள்ள ஜுலை முதல் தேதியன்று திறக்கப்பட்ட 16 கி.மீ.நீளப்பாலம் உதவலாம். 7000 ஆண்டுகளுக்கு முன் இவை ஒரே நிலப்பரப்பாக இருந்தனவாம். பின்னர் பனியுகத்தில் பிரிந்து ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் விரோதிகளாகின. இதற்குக் காரணம் ஸ்வீடனின் தென் மாநிலமான ஸ்கான். இதை டென்மார்க் 600 ஆண்டுகளாகத் தன் வசத்தில் வைத்திருந்தது. இதற்காகப் பல போர்கள் நடந்து முடிவில் 1658ல் இது ஸ்வீடனுக்கே சொந்தம்

## ஒரு நாடு மன்னிப்பு கோருகிறது

பாங்காக்கின் டாக்ஸி ஓட்டுபவரின் பதிநான்கு வயதான மகள் அய்ஷாஹ் நவாலி. இவர் ஜுன் முதல் வாரத்தில் மலேசியாவின் லாங்காவி என்ற தீவிற்குச் சென்றது ஒரு முக்கிய நிகழ்ச்சியாகும். ஏனெனில் இவரது வருகையால் 200 ஆண்டுகளுக்கு முன் அத்தீவிற்குக் கொடுக்கப்பட்ட சாபம் விலகும் என்று அங்குள்ள மக்கள் நம்புகிறார்கள். இந்த அய்ஷா அந்தத் தீவிற்கு சாபம் கொடுத்த மாஹ்சூரியின் வம்சத்தில் வந்தவர். மாஹ்சூரி வேலை தேடி மலேயாவிற்கு (தற்போதைய மலேசியா) வந்தார். இத்தீவில் ஒரு மலேசியா படை வீரரை இவர் மணந்து கொண்டார். இவருடைய கணவர் போர்க்களத்திற்குச் சென்று விடவே, மாஹ்சூரி நடத்தை கெட்டவள் என்று குற்றம் சாட்டப்பட்டு, விசேஷமான கத்தியால் குத்திக் கொல்லப்பட்டார். இவரது ரத்தம் வெள்ளையாக இருந்ததால் இவர் தூய்மையானவர் என ஆகி விட்டது. ஆனால் கொல்லப்படுவதற்கு முன் இவர் அத்தீவை சபித்தாராம். அத்தீவில் ஏழுதலை முறைக்குப் பெண் குழந்தையே பிறக்காது என்பது அந்த சாபம். இதற்குப்பின் மலேயா மீது சயாம் (தற்போதைய தாய்லாந்து)படை எடுக்க மாஹ்சூரியின் ஒரே மகள் தன் குடும்பத்துடன் தன் தாய் நாட்டிற்குத் திரும்பி சென்றான். மலேசியர் இப்போது அய்ஷாஹிற்கு குதூகல வரவேற்பு அளித்து, அவள் குடும்பத்திற்கு இழைக்கப்பட்ட அநீதிக்கு மன்னிப்பு கோரியதோடு குடிமகன் உரிமையையும் ஒரு வீட்டையும் கொடுத்து உத்தியோகமும் கொடுத்தார்கள். அவர் மாஹ்சூரியின் கல்லறையைக் காணச் சென்ற போது மக்கள் மரியாதை காட்டி அவரைப்பின் தொடர்ந்தார்கள்!

என்றாகியது. ஆயினும் இங்குள்ளவர்கள் டென்மார்க்கிற்குப் போக ஒரு பாலம் கட்ட வேண்டுமென்று கோரி வந்தார்கள். இது பற்றி நீண்ட காலம் இரு அரசாங்கங்களும் கூடிப் பேசி நான்கு ஆண்டுகளுக்கு முன் தான் பாலம் கட்டும் வேலையைத் துவக்கின. ஓரே சுண்ட்வளைகுடாவிலுள்ள ஸ்வீடனின் மால் டோப்பையும் டென்மார்க்கின் தலைநகரான கோபன் ஹேகனையும் இப்பாலம் இணைக்கிறது. இதன் திறப்பு விழாவில் லட்சக்கணக்கில் மக்கள் உற்சாகத்துடன் பங்கேற்றனர்.



# சிறுவர்சிறுமியர்களில் எழுத்தாளர்களுக்கும் ஓவியர்களுக்கும் அழைப்பு



அம்புலிமாமா நவம்பர் 2000 இதழ்
சிறுவர் சிறுமியர் சிறப்பிதழாகத் திகழும்

இந்த இதழில் 16 வயதிற்குக் கீழுள்ள சிறுவர், சிறுமியரின் படைப்புகள் இடம் பெறும்.

படைப்புகள் : சொந்தக் கற்பனைக் கதைகளை 100லிருந்து 1000 வார்த்தைகளுள் எழுதி கவர்ச்சியான தலைப்புடன் அனுப்பவும். இதில் கலந்து கொள்பவர்கள் மூன்று படைப்புகள் வரை தமிழிலோ, தெலுங்கிலோ, ஒரியாவிலோ, வங்காளியிலோ, மராட்டியிலோ, ஹிந்தியிலோ அல்லது ஆங்கிலத்திலோ அனுப்பலாம்.

ஓவியங்கள் : மூன்று ஓவியங்களை வண்ணமில்லாமலோ அல்லது வண்ணங்களிலோ ஏதாவது நன்கு தெரிந்த இந்தியப் புராண நிகழ்ச்சியைச் சித்தரித்து அதை சில வார்த்தைகளில் விளக்கி அனுப்பலாம். இவற்றை அனுப்புபவர்களின் படைப்புகள் எங்கள் எதிர்பார்ப்பின் படி இருக்குமானால் நவராத்திரி விடுமுறையில் அப்படைப்பாளர்கள் எம் செலவில் சென்னைக்கு வரவழைக்கப்பட்டு சிறப்பிதழுக்குத் தேர்ந்தெடுக்கப் பட்ட கதைகளுக்கு ஓவியங்கள் தீட்டக் கேட்டுக் கொள்ளப்படுவார்கள்.

கடைசி தேதி: செப்டம்பர் 18, 2000

பரிசுகள் : தகுதி வாய்ந்த படைப்புகளுக்கு.

சான்றிதழ் : இதில் கலந்து கொள்வோர் இந்தக் கூப்பனைப் பயன்படுத்தித் தங்கள் பெற்றோரின் சான்றிதழை அனுப்ப வேண்டும்.

பெயர்...................................................வயது/பிறந்த தேதி..................

வகுப்பு.......... பள்ளி...........................................................................

வீட்டு முகவரி:.................................................................
.................................................................
.................................................................

பின்கோடு...........................................................

படைப்புகளின் விவரங்கள்

1..................................................
2..................................................
3..................................................



மேற்குறிப்பிட்ட படைப்புகள் அவனது/அவளது சொந்தப் படைப்பு எனவும் யாருடைய உதவியுமின்றி இயற்றப்பட்டது என நான் உறுதியளிக்கிறேன்.

பெற்றோரின் கையொப்பம்

வேதாளம் சொல்லும் கதை

# நாட்டின் திலகம்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் அவன் கீழே இறங்கி அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! இந்த பயங்கர நடு ராத்திரியில் நீ ஏன் இப்படிச் சிரமப்படுகிறாய்? ஏதாவது சிறந்ததைத் தேர்ந்தெடுக்கப் போகிறாயோ? அது அவ்வளவு எளிதல்ல. இதை



விளக்க ஒரு கதை கூறுகிறேன். கவன மாகக் கேள்'' என்று சொல்லிக் கதையை ஆரம்பித்தது.

வெகு நாட்களுக்கு முன் தவளகிரி என்ற நாட்டில் காசிநாதர் என்ற பண்டிதர் ஒரு குருகுலத்தை நடத்தி வந்தார். பல நாடுகளிலிருந்தும் மாணவர்கள் வந்து அதில் சேர்ந்து கல்வி பயின்று வந்தார்கள். ஒரு நாள் அவர் தம் மாணவர்களுக்கு நியாய சாஸ்திரத்தைக் கற்பித்துக் கொண்டிருக்கையில் அந் நாட்டு மன்னன் பூபேந்திரவர்மனின் தூதன் ஒருவன் வந்து அவரை வணங்கி மன்னனின் கடிதம் ஒன்றைக் கொடுத் தான். மன்னன் காசிநாதரைத் தலைநக ருக்கு வரும்படி அதில் அழைப்பு விடுத்திருந்தான்.

மறு நாள் காசிநாதர் தம் பிரதம சீடன் சிவசாமியுடன் குருகுலத்திலிருந்து தலைநகருக்குக் கிளம்பினார்.

வழியில் அவர் தர்மபுரம் என்ற கிராமத்தை அடைந்து அன்றிரவு அவ்வூர் சத்திரத்தில் தங்கினார். அப்போது சீடன் சிவசாமி சத்திரத்தில் பலர் கூறிய தகவலை கேட்டு தன் குருவிடம் ''குருவே! நாளை யாரோ ஒரு யோகி நதியின் நடுவிலிருந்து மேலே வந்து நீரின் மீது நடந்து வந்து இந்த கிராமத்து மக்களுக்கு தரிசனம் தந்து ஆசீர்வதிப் பாராம். இது ஆண்டுக்கு ஒரு முறை இந்தப் பௌர்ணமி தினத்தில் நடக்கிற தாம். நாளைக் காலை நாமும் இந்த அற்புதத்தைக் காணச் செல்லலாமா?'' என்று கேட்டான். காசிநாதரும் அதற்கு இணங்கி மறுநாள் காலை சீடனை அழைத்துக் கொண்டு அவ்வூரின் நதிக் கரைக்குச் சென்றார்.

அங்கு அந்த யோகியை தரிசிக்க மக்கள் கூடி இருந்தனர். நதியின் நடுவே இருந்த மணல் திட்டிலிருந்து யோகி நீரின் மேலே நடந்து வந்து கரையில் இருந்த கோவிலின் மேடை மீது ஏறி நின்றார். மக்கள் 'ஆஹா' என்று கூவி வணங்கவே அவரும் அவர்களுக்கு ஆசிகளை அளித்தார். இதைப் பார்த்து சிவசாமி தான் பிறப்பெய்திய பயனை அடைந்து விட்டதாக எண்ணிப் பூரித்துப் போனான்.

அதன்பின் குருவும் சீடனும் அங்கி ருந்து புறப்பட்டு மாலை வேளையில் ஒரு முனிவரின் ஆசிரமத்தை அடைந் தார்கள். ஹேமாங்கதர் என்ற அந்த

முனிவர் ஆசிரமத்தில் ஹோமத்தீ வளர்ப்பதாயும் மறு நாள் காலை அதில் பிரவேசித்து விட்டு ஒரு நாழிகைக்குப் பின் தங்க நிறமேனியுடன் வெளிவந்து அங்கு கூடியவர்களை ஆசீர்வதித்து விட்டு ஆசிரமத்துள் போய் தியானத்தில் அமர்ந்து விடுவார் என்றும் அந்த முனிவரின் சீடர்கள் சிவசாமியிடம் தெரிவித்தார்கள்.

மறுநாள் சிவசாமி தன் குருவுடன் ஹேமாங்கத முனிவர் அக்கினிப் பிரவேசம் செய்து வெளியே வருவதைக் காண அங்கு கூடிய கூட்டத்தோடு சேர்ந்து நின்றான். சூரியோதய வேளைக்கு ஹேமாங்கதர் ஹோமத் தீயில் புகுந்து சற்று நேரத்திற்குப்பின் தங்க மயமான உடலுடன் வெளியே வந்தார். அங்கு கூடி இருந்தவர்களை அவர் ஆசீர்வதித்து விட்டு அவர் ஆசிர மத்திற்குள் சென்று விட்டார். அந்த அதிசயத்தைக் கண்டு சிவசாமி கல்லாய்ச் சமைந்து நின்றான்.

அதற்குப் பின் காசிநாதரும் சிவசாமி யும் அங்கிருந்து புறப்பட்டு மலை பள்ளத்தாக்கு என்றெல்லாம் கடந்து கனகதுர்க்கம் என்ற ஊரை அடைந் தார்கள். அது மேடான பகுதி. அந்த ஆண்டில் மழை பெய்யாததால் பஞ்சம் தலை விரித்து ஆடியது. உண்ண உணவு இல்லாமலும் குடிக்க நீர் கிடைக்கா மலும் பலர் இறந்தனர்.

அந்த ஊரில் ரமணன் என்ற இளம் விவசாயி இருந்தான். அவன் அப்பகுதி யில் இருந்த இளைஞர்களை ஒன்று



திரட்டி உணவு தானியங்கள் ஏராளமாக விளைந்த பகுதிகளிலிருந்து அவற்றைத் தம் பகுதிக்குக் கொண்டு வந்து மக்க ளுக்கு உணவளித்தான். குடிநீர் கொண்டு வந்தும் எல்லோருக்கும் குடிக்கக் கொடுத்தான். வறட்சி நிவாரணப் பணி களுக்குப் பலரிடமிருந்து நன்கொடை கள் பெற்று அவற்றைச் சரியாகப் பயன் படுத்தினான். அதனால் நிவாரண மையங்களில் ஏழை மக்களின் கூட்டம் எப்போதும் இருந்தது. அவர்களுக்கு இல்லையெனாது உணவு கிடைத்து வந்தது.

காசிநாதரும் சிவசாமியும் அந்த ஊருக்கு வந்த போது ஒரு நிவாரண மையத்திற்கு வந்த ஒரு கிழவி பசி மயக்கத்தால் மயக்கமுற்று விழுந்து



விட்டாள். ரமணன் ஓடிப் போய் அவளைத் தூக்கி அவளுக்கு உணவு ஊட்ட முயன்றான். ஆனால் அப்போது அவளது உடலிலிருந்து உயிர் பிரிந்து விட்டது. அவளுக்காக ரமணன் கண்ணீர் வடித்தவாறே உட்கார்ந்திருந்தான்.

இந்த சோகக் காட்சியைக் கண்ட காசிநாதர் ரமணனை அணுகி ''இந்தக் கடும் வறட்சியைப் பற்றி விவரமாக மன்னனிடம் எடுத்துக் கூறி அவரது உதவியை அடையக் கூடாதா?'' என்று கேட்டார். ரமணனும் பணிவுடன் அவரை வணங்கி ''ஐயா! உதவி கோரி மன்னரை அணுகினோம். ஆனால் அவரிடமிருந்து எதுவும் கிடைக்கவில்லை. இவ்வளவு பரந்த நாட்டில் எம் பகுதியைச்சுண்டைக்காய்க்குச்சமமாகக் கருதி அலட்சியமாக இருந்து விட்டார் போலும்'' என்றான்.

அதைக் கேட்ட காசிநாதர் எதுவும் கூறாமல் சிவசாமியுடன் அங்கிருந்து புறப்பட்டுத் தலைநகருக்குப் போய்ச் சேர்ந்தார். மன்னனும் தக்க மரியாதையுடன் அவரை வரவேற்றான். காசிநாதரும் தம் பயணத்தின் போது தாம் கண்டவற்றை மன்னனிடமும் தர்பாரில் கூடி இருந்தவர்களிடமும் விவரமாகக் கூறினார். ''நம் நாட்டில் எவ்வளவோ மிக உயர்ந்த மனிதர்கள் இருக்கிறார்கள் என்று தெரிகிறது. என் அதிகாரிகளும் இம்மாதிரியான உயர்ந்த மனிதர்களின் பெயர்களை சமர்ப்பித்திருக்கிறார்கள். ஒவ்வொரு ஆண்டிலும் நம் நாட்டின் உயர்ந்த மனிதர்களில் ஒருவரைத் தோர்ந்தெடுத்து அவருக்கு நாட்டின் திலகம் என்ற பட்டத்தையும் இலட்சம் வராகன்களையும் நான் கொடுத்து அவரை கௌரவிப்பதைத் தாங்கள் அறிவீர்கள். இம்முறை தாங்கள் நடுவராக இருந்து இதற்குத் தகுதிபெற்ற ஒருவரைத் தேர்ந்தெடுக்குமாறு வேண்டிக் கொள்கிறேன்'' என்று கூறித் தன் அதிகாரிகள் கொடுத்த பெயர்கள் அடங்கியப் பட்டியலை அவரிடம் கொடுத்தான்.

காசிநாதரும் அதனை வாங்கிப் படித்துப் பார்த்து விட்டு ''மன்னா! வறட்சியால் தவித்துத்துடிதுடிக்கும் கனக துர்க்கவாசிகளின் துயர் துடைத்து, பசி, தாகம், ஆகியவற்றைப் போக்க இப்போதே உணவுதானியங்களை அனுப்பி குடிநீர் தினமும் அங்கு கிடைக்க ஏற்பாடு செய்யுங்கள். இதுவரை இப்பணியை

அரசாங்க உதவி இல்லாமல் கனகதுர்க்கத்தைச் சேர்ந்த ரமணன் என்ற இளைஞன் அங்குள்ள மக்களின் முழு ஆதரவு பெற்று செய்து வருகிறான். எனவே இந்த ஆண்டில் நாட்டின் திலகம் என்ற பட்டத்தை அவனுக்கு அளித்து இலட்சம் வராகன்களையும் அவனுக்குக் கொடுக்க வேண்டும் என்பதே என் தீர்ப்பு'' என்றார். மன்னனும் அவரது தீர்ப்பை ஏற்றுக் கொண்டான்.''

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னனே! காசிநாதர் மூன்று உயரியவர்களைப் பார்த்தாரே! நீரின் மீது நடந்த யோகி, ஹோமத்தீயில் புகுந்து தங்கமயமான மேனியுடன் வந்த முனிவர். கனகதுர்க்கத்தில் மக்கள் துயர் துடைத்த இளைஞன் ரமணன் அம் மூவர். இந்த மூவர் செயல்களும் மிகவும் உயர்ந்தனவே. ஆனால் காசிநாதர் யோகியின் செயலையும் முனிவரின் அற்புதச் செயலையும் ஒதுக்கிவிட்டு ஒரு சாதாரண விவசாயியான இளைஞன் ரமணனைப் பட்டத்திற்கும் பரிசுக்கும் ஏற்றவன் என முடிவு செய்தது சரியா? இதற்குச் சரியான விடை தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''காசிநாதர் அளித்த தீர்ப்பு மிகவும் சரியானதே. யோகியும், முனிவரும், ரமணனும் செய்தவை அற்புதமானவையும் உயரியதுமான செயல்களே. ஆனால் யோகியும், முனிவரும், செய்து காட்டிய செயல்களால் மக்களுக்கு ஒரு பயனும் இல்லையே. அவர்களது சக்தி எவ்வளவு என காட்டியதோடு நின்றுவிட்டது. அதனால் மக்களுக்கு எவ்வித நன்மையும் ஏற்படவில்லை. ஆனால் ரமணன் தன் சக்தி என்ன என்பதைக்காட்டி மக்கள் நன்மை அடைய பிறர்கையை எதிர்பாராமல் தானே முயன்று எல்லோருடைய துயரங்களைப் போக்கி உதவி புரிந்து வந்தான். எனவேதான் அவனே யாவரிலும் உயர்ந்த மனிதன் என்ற முடிவிற்கு காசிநாதர் வந்தார். இது மிகவும் சரியானதே'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறி விட்டது.





ஒரு உயரிய பண்பாட்டின் சம்பவங்கள்;
பரம்பரை பரம்பரையாய் சத்திய சோதனை:

# 8. பாரதப் புண்ணியபூமி



தசராவிற்காகப் பள்ளிகள் விடுமுறை விட்டு விடவே சேகரும் சியாமளாவும் மாலை வேளைகளில் தம் தாத்தா சோமநாதருடன் ஆற்றங் கரைக்குப் போய் உட்கார்ந்து அவர் சொல்லும் கதையைக் கேட்கலா யினர். இதனால் அவர்கள் தம் நண் பர்களுடன் விளையாடப் போக வில்லை. அவர்களது நண்பர்களே அவர்களைத் தேடிக் கொண்டு ஆற்றங்கரைக்கு வந்து விட்டார்கள்.

சோமநாதர் சொல்லும் கதை யைக் கேட்க அவர்களும் உட்கார்ந்து விட்டார்கள். சோமநாதர் சொல்லும் கதையை சேகருடனும் சியாமளாவு டனும் சேர்ந்து கவனமாய் ஆவலு டன் அவர்களும் கேட்கலானார்கள். அவர்களது ஆவலைக் கண்ட சோம நாதரும் ''குழந்தைகளே! இப்போது உங்களுக்கு தசராவுக்காக பள்ளி விடுமுறை விட்டுள்ளது. இந்த தசராப்பண்டிகை பற்றி இன்று உங்க ளுக்குச் சொல்கிறேன்'' எனக் கூறி தசரா பற்றி சொல்லலானார்.

'தசராப் பண்டிகை நம் நாட்டின் பல பாகங்களில் ஒவ்வொரு வித மாகக் கொண்டாடப்படுகிறது. தென்னிந்தியாவில் லக்ஷ்மி, சரஸ்வதி, துர்க்கை ஆகிய மூன்று தேவிகளையும் பூஜிக்கிறார்கள். வங்காளத்தில் துர்க்கா பூஜையும் சரஸ்வதி பூஜையும் இச்சமயத்தில் மிகச்சிறப்பாக நடைபெறுகின்றன. ஒரிஸ்ஸா மாநிலத்தில் சரஸ்வதி

- பாரதீயன் -



பூஜை தசராவின் போது கோலாக லமாக நடை பெறுகிறது. கர்நாடக மாநிலத்தில் சாமுண்டீஸ்வரியின் பூஜை சிறப்பாக நடைபெற்று தசராவின் பத்தாவது நாளில் கோலா கலமாய் ஊர்வலம் நடத்தப்படு கிறது. பொதுவாக சக்தி என்ற அம்மனைப் பல வடிவங்களில் இந்நாட்டில் பல பகுதிகளில் பல் வேறு விதமாய் இந்நாட்களில் வழிபட்டு வருகிறார்கள்.

தசராவில் கடைசி நாள் விஜய தசமி எனப்படுவது. இராமர் இராவணனை வென்ற நாள் இது என்று கருதப்படுகிறது. இதனால் வட இந்தியாவில் ராமலீலா கொண் டாடப்படுகிறது. தீய சக்தி அழிய நற் செயல்கள் வெற்றி பெறுகின்றன என்பதை இது எடுத்துக் காட்டு கிறது.

சக்தியின் மறு அவதாரம் துர்க்கை. நம் சாஸ்திரங்களையும் புராணங்களையும் படித்து அம்பாளின் மேன்மையைத் தெரிந்து கொள்ளலாம். உங்களுக்குப்புரியும் படியாக சக்தி என்னும் அம்பாளைப் பற்றிய கதையைக் கூறுகிறேன்.

உலகில் எல்லா ஜீவராசிகளையும் படைப்பவர் பிரம்மா. அவரது மகன்களில் ஒருவன் தான் தக்ஷன். அவன் பிரம்மாவின் வலது கட்டை விரலிலிருந்து பிறந்தவன். பிரம்மா



வின் இடது கட்டை விரலிலிருந்து பிறந்த வீரணியை அவன் மணந்து கொண்டான். தக்ஷனுக்கு ஐம்பது புதல்விகள் பிறந்தனர். அவர்களில் நாற்பத்தொன்பது பேர்கள் தேவர் களையும் முனிவர்களையும் மணந்து கொண்டார்கள். கடைசி மக ளான சதி தேவி என்ற தாக்ஷாயணி மட் டும் தன் தந்தையின் விருப்பத்திற்கு மாறாக சிவபிரானை மணந்து

கொண்டாள். இது தக்ஷனுக்கு மிகவும் எரிச்சலை மூட்டியது.

கொஞ்ச நாட்களுக்குப் பின் தக்ஷன் ஒரு யாகம் செய்யலானான். அதற்கு எல்லா தேவர்களையும், ரிஷிமுனிவர்களையும், தன் புதல்வி



களையும், அவர்களது கணவன்களை யும் அழைத்தான். ஆனால் சதிதேவி யையும், சிவனையும் மட்டும் அழைக்கவில்லை. இதனால் ஆத்தி ரப்பட்டு சதிதேவி தன் கணவனிடம் தக்ஷனின் யாகத்திற்குப் போக வேண் டும் என்று பிடிவாதம் பிடித்தாள்.

சிவனோ ''சக்தியே! மதியாதார் வாசல் மிதிக்க வேண்டாம் என்பது தெரியாதா? நீ போகக் கூடாது. மீறிப் போனால் விபரீதம் விளையும்'' என்று எச்சரித்தார். சதிதேவியோ ''நான் போகத்தான் போவேன். ஒரு மகள் தன் தந்தையின் வீட்டிற்குப் போவதற்கு அழைப்பு வேண்டுமா என்ன?'' என்றாள். சிவனாரோ ''எனக்கோ அழைப்பு கிடையாது. என் வார்த்தையை மீறிப் போனால் நீ அவமானப் படத்தான் போகி றாய்'' என்று எச்சரித்தார். சதி தேவி அதைப் பொருட்படுத்தாமல் தன் தந்தை செய்யும் யாகத்தைக் காணச் சென்றாள்.

தன் மகளைப் பார்த்த தக்ஷன் கர்வத்தோடு ''உனக்குத்தான் அழைப்பு கிடையாதே. ஏன் வந்தாய்? உன் கணவனுக்கு வீடு என்று ஒன்று கிடையாது. மயானத் தில் திரிகிறான். உடுக்க சரியான உடை இல்லை. ஏதோ ஒரு மிருகத் தின் தோலை எடுத்துப் போர்த்திக் கொள்கிறான். தலைவனாம்! யாருக்கு? பேய் பிசாசு, பூத கணங் களுக்கு! இப்படிப்பட்டவனுக்கா நான் மரியாதை கொடுப்பேன்?'' என்று கூறினான். தன் தந்தை கூறியது கேட்டு அவமானம் தாங்காமல் சதி தேவி யாகத்தீயில் குதித்து உயிர் நீத்தாள். இது கண்டு யாவரும் திகைத்தனர்.

சதி தேவியுடன் வந்த பூத கணங் கள் கைலாசத்திற்குச் சென்று சிவனா ரிடம் நடந்ததைக் கூறின. அது கேட்டு

அவர் கோபம் கொண்டு தன் தலைச் சடைகளில் ஒன்றை எடுத்து தரையில் ஓங்கி அடித்து பயங்கர உருவில் வீர பத்திரனைத் தோற்றுவித்தார். வீரபத்திரன் தக்ஷன் யாகம் செய்யும் இடத்திற்குப் போய் பயங்கரமாய்த் தாக்கி யாகத்தை அழித்தான். இதற்குள் சிவனாரும் அங்கு வந்து தன் சூலத்தால் தக்ஷனின் தலையைத் துண்டித்தார்.

தக்ஷனின் மனைவியும் தேவர்களும் சிவனாரை வணங்கி தக்ஷனின் குற்றத்தை மன்னிக்குமாறு வேண்டினார்கள். சிவனும் கோபம் தணிந்து தக்ஷனை உயிர்ப்பித்தார். அவனது தலை எங்கும் இல்லாததால் அவனது உடலில் ஒரு ஆட்டின் தலை பொருத்தப்பட்டது.

சிவனார் சதி தேவியின் உடலைச் சுமந்து கொண்டு பித்தன் போல பூலோகம் முழுவதும் சுற்றி வரலானார். அது கண்டு விஷ்ணு தன் சக்கராயுதத்தைப் பிரயோகித்து சதி தேவியின் உடலை சிறு சிறு துண்டுகளாக்கி இமயம் முதல் குமரி வரை பரந்து கிடக்கும் நம் பாரத நாட்டில் அவற்றை ஆங்காங்கே விழச் செய்தார். சக்தியின் மறு அவதாரம் சதி தேவி எனபூவுலகினர் தெரிந்து கொண்டு அத்துண்டுகள் விழுந்த இடங்களில் சதி தேவிக்கு ஆலயங்கள் கட்டினார்கள். எனவே தான் நம் பாரத நாடு புண்ணியபூமியாகக் கருதப்படுகிறது. சக்திதான் சதி தேவி, துர்க்கை, சாமுண்டி என்ற பெயர்களில் உள்ளது. எனவே, மக்கள் இப்பெயர்களை வைத்து சக்தியை ஆராதித்து வருகிறார்கள்.

சோமநாதர் இப்புராணக் கதையைக் கூறி முடித்ததும் சேகரும் சியாமளாவும் மற்ற சிறுவர்களும் ''கதை மிக நன்றாக இருக்கின்றது. நாளை இன்னொரு கதை சொல்லுங்கள்'' என்று கூறிக் கொண்டு எழுந்தார்கள்.



# அன்று இதே மாதத்தில் பிறந்தவர்
# சர்வேபள்ளி

## ராதாகிருஷ்ணன்



இந்திய வேதாந்த தத்துவ வித்தகர் சர்வேபள்ளி ராதாகிருஷ்ணன் 1888 செப்டம்பர் 5ல் பிறந்தவர். இவர் நம் குடியரசுத் தலைவராக 1962லிருந்து 1967 வரையான ஐந்தாண்டு காலம் இருந்திருக்கிறார்.

வேதாந்த தத்துவத்துறையில் சென்னை பல்கலைக்கழகத்தின் மாநில கல்லூரியில் பேராசிரியராக முதலில் பணியாற்றி விட்டுப் பிறகு கல்கத்தா பல்கலைக் கழகத்தில் அதே துறையில் அதே பணியை ஏற்றார். பின் ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்தில் கிழக்கத்திய நாடுகள் மதங்கள் பற்றிய பேராசிரியரராக 1936லிருந்து 1939 வரை பணியாற்றினார். அதன் பின் 1948 வரை காசி ஹிந்து பல்கலைக்கழகத்தின் துணை வேந்தராக இருந்தார்.

அவர் நல்லாசிரியராக மட்டுமல்லாது நல்ல பேச்சாளராகவும் புகழ் பெற்றார். யூனெஸ்கோ என்ற உலகத் தாபனத்தின் தலைவராக 1949ல் இருந்தார். அப்போது அயல்நாடுகளில் இந்திய தூதுவராக இருக்க உறுதி மனம் கொண்டவர்கள் தேவைப்பட்டது. ராதாகிருஷ்ணன் அப்போதைய சோவியத் ரஷ்யாவிற்கு நம் நாட்டு தூதுவராக அனுப்பப்பட்டார். அப்போது ரஷ்யாவின் அதிபர் இரும்பு மனிதரான ஸ்டாலின். அவரைத்திருப்திப் படுத்துவது எளிதல்ல. அவரே ராதா கிருஷ்ணனின் புலமையையும் அரசியல் திறமையையும் பாராட்டி இருக்கிறார்!

அடுத்து அவர் நம் நாட்டின் துணைக் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். பின்னர் 1962ல் இந்தியக்குடியரசின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

இவரது நூல்களில் இந்தியவேதாந்த தத்துவம் என்பது சிறப்பானதாகக் கருதப் படுகிறது. ''கடவுள் உலகைப் படைத்தார் என்று கூறுவது குறைவாக மதிப்பிடுவதாகும். அவர் இன்னமும் படைத்துக் கொண்டே இருக்கிறார். இனியும் படைத்துக் கொண்டே இருப்பார். இது கடவுளைப் பற்றிய வரலாறு. இந்த தெய்வீக சக்தி பூவுலகின் வாயிலாகத் தன் ஒளியைப் பரப்பி மிளிர்கிறது'' இது தான் அவர் கூறியதில் முக்கியமானது எனலாம்.

ராதாகிருஷ்ணன் 1975ல் அமரரானார். இவரது பிறந்த நாளான செப்டம்பர் 5 ஆசிரியர் நாளாக நம் நாடு முழுவதிலும் கொண்டாடப்படுகிறது.



# தங்க சிம்மாசனம்

## 9

**[கௌண்டனிய நாட்டு இளவரசன் விஜயதத்தனுக்கு ஒரு தங்க சிம்மாசனம் கிடைத்தது. அதை தர்பாரில் வைத்து அதன் படிகளில் ஏற அவன் முயலவே முதல்படியிலிருந்த சத்திய சக்திப் பதுமை தான் ஒரு கதையைக் கூறி அதில் சில கேள்விகளைக் கேட்கப் போவதாகவும் அதற்குச் சரியான விடைகளைக் கூறினாலே அவனால் அடுத்தபடியில் கால் வைக்க முடியும் என்றது. அது கதையைச் சொல்லி, கேட்ட கேள்விகளுக்குச் சரியான விடைகளைக் கூறி விட்டு விஜயதத்தன் அடுத்தபடியில் காலை வைத்தான். இரண்டாவது படிப் பதுமையும் அது போலக் கூறிக்கேட்ட கேள்விகளுக்கு விடை அளித்து விட்டு மூன்றாவது படியில் அவன் காலை வைக்க, மூன்றாவதுபடி நியாய சக்திப் பதுமையும் ஒரு கதை சொல்லலாயிற்று. அதன்படி-]**

சந்திரனும் பணிவுடன் மன்னனை வணங்கி ''அரசே! வீரநந்தன் கூறியது அநேகமாக உண்மை என்றாலும் உண்மையோடு அவன் தன் சில அபிப்பிராயங்களையும் சேர்த்துச் சொல்லி விட்டான். அதனால் உண்மை நிலை திரித்துக் கூறப் பட்டிருக்கிறது'' என்று கூறித் தொடர்ந்தான்.

''வீரநந்தனும் நானும் இளம் வயதிலிருந்தே நண்பர்கள். இருவரும் சம்மந்திகளாகலாம் என்று சொல்லிக் கொண்டதும் உண்மையே. ஆனால் சொன்னபடி நடக்காமல் இருக்கப் பணம் மட்டுமல்ல, இரு குடும்பங்களின் வாழ்க்கை முறையுமேயாகும். இதற்குக் காரணம் எங்கள் மனைவிகளே. என் மனைவி புத்திசாலி. நான் சம்பாதித்துக் கொண்டு வந்த



பணத்தில் பாதியைச் சேமித்து வந்தாள். மற்ற பாதியைக் குடும்பச் செலவுகளுக்கு ஒதுக்கினாள். ஆரம்ப காலத்தில் அப்பளம், வடாம், ஊறுகாய் போன்றவற்றைத் தயாரித்து விற்றும் பணம் சேர்த் தாள். சேமித்த பணத்தைக் குறைந்த வட்டிக்குக் கடன் கொடுத்தும் பணம் சம்பாதித்தாள். அவளது உழைப்பால் இன்று செழிப்புடன் இருக்கிறோம். அவளைக் கண்டு நானும் என் மகளும் நன்கு உழைக் கப் பழகிக் கொண்டோம்.

ஆனால் வீரநந்தனின் மனைவி இதற்கு நேர்மாறாக இருந்தாள். எந்த வேலையும் செய்யாமல் தன் குழந் தைகளுக்குச் சமைத்துப் போடக் கூட முணு முணுத்து வந்தாள். தன் கணவன் பணம் சம்பாதிக்காத போது அவனை இடித்துக் காட்டி குறை கூறி வந்தாள். அவனும் உழைக்காமல் பிறரைக் குறை கூறியே வந்தான்.

நானும் என் மனைவியும் நாங்கள் மாப்பிள்ளையாக்கிக் கொள்ள நினைத்த வீரநந்தனின் மகன் சாரங் கனை எங்கள் வழிக்குக் கொண்டு வர முயன்றோம். அவனைச் சற்று கடிந்து கொண்டாலும் சந்திரனின் மனைவி கனகம் கோபமும், ஆத்திர மும் கொண்டு கத்தி வந்தாள். அக் குடும்பத்தவர் என்றாவது திருந்து வார்கள் என்று எதிர்பார்த்தோம். ஆனால் அவ்வாறு எதுவும் நடக்காத தால் எம் மகளை சாரங்கனுக்கு மணம் செய்து கொடுக்க மறுத்து விட்டோம்'. சாரங்கனுக்கு வயது பதினேழு. என் மகளின் வயது பதினைந்து. அவனுக்கு உழைக்க விருப்பமே இல்லை. என் மகளோ எப்போதும் சுறுசுறுப்பாகச் செயல் படுபவள். அது மட்டுமா? அவன் குடிகாரன். சூதாடியும் கூட. இப் படிப்பட்டவனுக்கு என் மகளைக் கொடுப்பதைவிட வாக்குத் தவறு வது எவ்வளவோ மேலானது. இப் படி நிலைமை இருக்க இந்த வீரநந் தன் எங்கள் பணத்தை அடைய ஆசைப்பட்டு எங்களைத் தூற்றித் திரிந்து வருகிறான். இப்போது

என்னை உங்கள் முன்னும் கொண்டு வந்து நிறுத்தி விட்டான்''.

இவ்வாறு சந்திரன் கூறி முடிந்ததும் வீரநந்தன் ஆவேசத்தோடு எழவே, நியாயவர்த்தனன் அவனை உட்காரச் சொல்லிவிட்டு ''சந்திரா! அப்படியானால் உன் மகளை யாருக்குக் கல்யாணம் செய்து வைக்கப் போகிறாய்?'' என்று கேட்டான். அது கேட்டு சந்திரன் சற்றுத் தடுமாறியவா றே ''என் மைத்துனனின் மகனுக்கும் சாரங்கனின் வயதே ஆகிறது. இந்த வழக்கு நல்ல விதமாக முடிந் தால் அவனுக்கு என் மகளைத் திருமணம் செய்து வைக்க எண்ணி இருக்கிறேன்'' என்றான்.

அப்போதும் வீரநந்தன் ஆவேசத்துடன் எழுந்திருக்கவே, நியாய வர்த்தனன் அம் முறையும் அவனை உட்காரச் சொல்லிவிட்டு ''வீரநந்தா! உன் வழக்கை முழுவதுமாக விசாரித்தாகி விட்டது. நீ வெளியே போய் உட்கார்ந்திரு'' எனக் கூறி விட்டு அடுத்த வழக்கை விசாரிக்க எடுத்துக் கொண்டான்.

அப்போது அயல் நாட்டு வியாபாரியான மணிகர்ணன் என்ற இளைஞன் மன்னன் முன் நின்று ''அரசே! நான் அயல் நாட்டு வியாபாரி மணிகர்ணன். இவ்வூர் வியாபாரி ரத்தினகுப்தன் மீது வழக்குத் தொடுக்க வந்திருக்கிறேன். நான் சிம்மள நாட்டவன்.



என் தந்தை அந்நாட்டின் பிரபல வியாபாரி. சிறு வயதில் நான் அவரிடம் வியாபார நுணுக்கங்களைக் கற்காமல் ஊர் சுற்றிக் கொண்டிருந்தேன். என் தந்தை திடீரென இறந்து விடவே அவரது வியாபாரத்தை ஏற்று நடத்த வேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டேன். கொஞ்ச காலம் என் நாட்டிலேயே நான் வியாபாரம் செய்தேன். லாபம் அதிகம் கிடைக்கவில்லை. நிறைய சம்பாதிக்க வேண்டுமென்ற பேராசையில் என் நாட்டில் கிடைக்கும் வாசனைத் திரவியங்களையும், தந்தக் கைவினைப் பொருள்களையும் ஒரு கப்பலில் ஏற்றிக் கொண்டு



அயல் நாடுகளுக்குக் கிளம்பினேன்.

இந்நாட்டிற்கு வருவதற்கு முன் வழியில் இரு தீவுகளில் என் சரக்கில் கொஞ்ச பாகத்தை நல்ல லாபத் திற்கு விற்றேன். என் சரக்குகளுக்கு இந்த நாட்டில் நல்ல கிராக்கி இருக் கிறது என்றும் அவற்றை விற்றால் நல்ல லாபம் கிடைக்கும் எனக் கேள்விப்பட்டதால் இங்கு துறை முகத்திற்கு மூன்று நாட்களுக்கு முன் வந்தேன்.

நான் வந்த கப்பலின் தலைமை மாலுமி கப்பல் இங்குள்ள துறை முகத்தில் மூன்று நாட்களுக்கு மட்டு மே இருக்கும் என்றும் அதற்குள் வியாபாரத்தை முடி என்றும் கூறினான். அவ்வாறு வியாபாரத்தை முடிக்க முடியாமல் இந் நாட்டி லேயே எல்லாச் சரக்கு களையும் விற்பதாக இருந்தால் ஊருக்குள் ஒரு கிடங்கை வாடகைக்கு அமர்த்திக் கொண்டு அதில் என் சரக்குகளை எல்லாம் கொண்டு சேர்த்து மெது வாக வியாபாரம் செய்யலாம் என்று கூறினான். நானும் மூன்று நாட் களுள் என் சரக்கை முழுவதும் விற்று விட்டுப் போவதா அல்லது ஒரு கிடங்கை வாடகைக்கு எடுத்துக் கொண்டு அந்த ஊரில் கொஞ்ச காலம் இருந்து வியாபாரம் செய் வதா என்று யோசிக்கலானேன்.

இந்த யோசனையில் துறை முகத்தை விட்டு வெளியே வந்து நின்று சுற்றிலும் பார்த்தேன். அப் போது என்னை நோக்கி இந்த ரத்தின குப்தர் வந்தார். என்னை விட வயதில் மூத்தவரான இவர் என்னைப் பரிவுடன் பார்த்தார். என்னருகே நிற்கவே, நான் இவரி டம் பேசி இவர் இதே ஊரில் முப் பது ஆண்டுகளுக்கு மேலாக வியா பாரம் செய்து வருவதாகத் தெரிந்து கொண்டேன். நான் இவரைப் பார்த் ததில் மகிழ்ச்சி அடைந்து என்னைப் பற்றி விவரமாகக் கூறி நான் இந் நாட்டில் வியாபாரம் செய்ய என் நாட்டிலிருந்து சரக்குளைக் கப்ப லில் கொண்டு வந்திருப்பதாகக் கூறினேன்.

நான் கூறியதை மிகவும் கவனமாகக் கேட்டுவிட்டு இந்த ரத்தினகுப்தர் மிகவும் கனிவாக ''தம்பீ! வியாபாரத்தில் உனக்குப் போதிய அனுபவம் இல்லை என்றே தெரிகிறது. நீயோ அயல் நாட்டான். மூன்று நாட்களுள் உன் சரக்குகளை எல்லாம் விற்றுவிட முயன்றால் இவ்வூர் வியாபாரிகள் உன்னை நன்கு ஏமாற்றி விடுவார்கள். சில நாட்கள் தங்கி நீ உன் சரக்குகளை பத்திரமாக வைக்க ஒரு கிடங்கை நீ வாடகைக்கு எடுத்தாக வேண்டும். அயல் நாட்டவனான நீ கிடங்கை வாடகைக்கு எடுக்க வேண்டு மென்றால் நீ அரசாங்கத்திடமிருந்து அனுமதி பெற வேண்டும். அந்த அனுமதி எளிதில் கிடைக்காது. நான் உன்னை என் மகன் போல நினைத்து இதைச் சொல்கிறேன். மூன்று நாட்களில் உன் சரக்குகளை விற்கும் எண்ணத்தை விட்டு விடு. கிடங்கு கிடைக்க வேண்டுமே என்று கவலைப்படாதே. என் வீடு கப்பல் போலப் பெரியது. அதில் ஒரு அறையில் உன் சரக்குகளை வைத்து பூட்டிக் கொள். நல்ல விலைவரும் போது விற்று லாபம் அடை. ஏதோ உன்னைப் பார்த்ததும் பொங்கி வந்த பாசத்தால் இதைக் கூறினேன். நன்கு யோசித்துப்பார்'' என்றார்.

நானும் யோசித்தேன். இவர் சொல்வதே சரி என என் அறிவில் பட்டது. இவரிடம் இவர் வீட்டிற் கே வருவதாகக் கூறினேன். ஒரு வண்டியை வாடகைக்கு அமர்த்தி னோம். கப்பல் தலைவனைப் பார்த்து அவனுக்குக் கொடுக்க வேண்டிய பணத்தைக் கொடுத்து விட்டு என் சரக்குகளை கரையில் இறக்கி வண்டியில் ஏற்றினேன். இவர் தம் முகவரியை வண்டிக் காரனிடம் கூறி வண்டியை அங்கு ஓட்டச் சொன்னார். வண்டி இவரது வீட்டை அடைந்ததும் அங்கு மாடி யில் எனக்கு ஒரு அறையை ஒதுக்கி அதில் என் சரக்குகளை வைக்கச் சொன்னார். எல்லாச் சரக்குகளும்





அறையில் வைக்கபட்டபின் அறையின் கதவைப்பூட்டி சாவியை என்னிடம் கொடுத்தார். இவரது உபகாரச் சிந்தையைக் கண்டு வியந்தேன். ஒரு தந்தைக்கு மகன் பாலுள்ள பாசம் போல இவர் என் மீதும் வைத்திருக்கிறாரே என்று எண்ணி மகிழ்ந்து போனேன். இவரிடமிருந்து அறைச் சாவியை வாங்கிக் கொண்ட பின் கீழே இறங்கிப் போய்க் குளித்து விட்டு வந்தேன். உடனே என்னை சாப்பிட அழைத்துச் சென்றார். அது விருந்து சாப்பாடு. நான் திகைத்தே போனேன். சாப்பாடானதும் இவர் என்னை மாலைவரை ஓய்வு எடுத்துக் கொள்ளச் சொன்னார்.

மாலையானதும் இவர் என்னை ஒரு கேளிக்கை இல்லத்திற்கு அழைத்துச் சென்றார். அங்கு ஏராள மான மங்கைகள் நடனமாடிக் கொண்டிருந்தனர். மது தாராளமாக வழங்கப்பட்டது. என் இளம் வயதில் நான் எவ்வளவோ கேளிக்கை இல்லங்களுக்குப் போயிருக்கிறேன். வியாபாரத்தை மேற் கொண்ட பின் நான் அந்தப் பழக்கத்தை விட்டிருந்தேன். ஆனால் இப்போது அத்தகைய இல்லத்தில் அடி எடுத்து வைத்ததும் மீண்டும் என் மனதில் மது, மங்கை பற்றிய ஆசைகள் பீறிட்டு வெளி வந்தன. என்னுடன் வந்த இவர் மது அருந்தவில்லை. ஒதுப்புறமாக ஓரிடத்தில் உட்கார்ந்திருந்தார். நானோ மதுவை மிதமிஞ்சி அருந்தி மங்கைகளுடன் ஆடிப்பாடி மகிழ்ந் தேன்.

இரவு வெகு நேரமாகிய பின் போதையில் மயங்கி இருந்த என்னை இவர் தம் மாளிகைக்கு அழைத்துச் சென்றார். வழியில் இவர் ''மணிகர்ணா! உன் சரக்குகள் முழுவதையும் நானே விலைக்கு வாங்கிக் கொள்கிறேன். அவற்றில் வியாபாரம் செய்வது எனக்கு இதுவே முதல் தடவை. எனவே அவற்றின் மொத்த விலை என்ன என்று எனக்கு இப்போது தெரியாது.

நாளை மாலைக்குள் விசாரித்து வைக்கிறேன். உனக்கும் செல விற்குப் பணம் தேவைப்படும் உனக்கு முன் பணமாகப் ஒரு லட்சம் வராகன்கள் கொடுக்கிறேன். நாளை மாலை விலை விவரம் தெரிந்ததும் முழுப் பணத்தையும் கொடுக்கிறேன்'' என்றார்.

இதைக் கேட்டு நான் உச்சி குளிர்ந்து போனேன். அரை மயக்கத்தில் இருந்த நான் அது பற்றி எண்ணியவாறே தூங்கி விட்டேன். காலையில் எழுந்த போதுதான் போதை தெளிந்து சுய நினைவு பெற்றேன். காலைக் கடன்களை முடித்தபின் இரவில் நடந்ததை நினைத்துப் பார்த்தேன். இவர் கூறியது நினைவிற்கு வந்தது. அப்போது நான் இவரிடம் ''நீங்கள் நேற்றிரவு கூறியது உண்மையா? என் சரக்குகளை முழுவதும் வாங்கிக் கொள்ளப் போகிறீர் களா?'' என்று கேட்டேன்.

இவரும் ''இதில் சந்தேகம் என்ன? நேற்றிரவு கூறியபடி ஒரு லட்சம் வராகன்கள் கொடுக்கிறேன். இந்த வெற்றுத் தாள்களில் கையொப்பமிடு. இவை முன் பணத் திற்கான ரசீதாகவும் ஒப்பந்தம் செய்து கொண்டு மீதப் பணத்தை வாங்கிக் கொண்ட ரசீதாகவும் இருக்கும். இதற்கான வாசகங்களை சாவகாசமாக எழுதி வைக்கிறேன். இப்போது



பணத்தை வாங்கிக்கொள்'' என்று கூறி ஒரு லட்சம் வராகன்களைக் கொடுத்தார். நானும் இவர் வார்த்தை களில் நம்பிக்கை வைத்து வெற்றுத் தாள்களில் கையெழுத்துப் போட்டுக் கொடுத்துவிட்டு லட்சம் வராகன் களைப் பெற்றுக் கொண்டேன். இதன்பிறகு நான் இவ்வூர்க் கடைத் தெருவிற்குச் சென்று நான் கொண்டு வந்த சரக்குகளின் விலை பற்றி விசாரித்தேன். நான் தெரிந்து கொண்டதில் என் சரக்குகள் நாற்பதி லிருந்து ஐம்பது லட்சம் வராகன்கள் மதிப்புள்ளவை என்று தெரிந்தது. இன்னும் மூன்று மாதங்கள் கழிந்து வரும் திருவிழா சமயத்தில் விற்றால்

அறுபதிலிருந்து எண்பது லட்சம் வராகன்கள் கூடக் கிடைக்கலாம் என்றும் தெரிந்து கொண்டேன். இதன் பிறகு நான் வீட்டிற்குத் திரும்பிச் சென்றேன்.

நான் வீட்டை அடைந்தபோது ரத்தினகுப்தர் ''மணிகர்ணா! தனியாக எங்கே போனாய்'' என்று கேட்டார். நானும் கடை வீதிக்குப் போனதாகக் கூறி ''ஐயா! நீங்கள் என் சரக்குகளுக்கு என்ன விலை கொடுக்கப் போகிறீர்கள்?'' என்று கேட்டேன். இவரோ ''என்ன வேடிக்கை செய்கிறாயா? உன் சரக்குகளை இரண்டு லட்சம் வராகன்களுக்கு விற்று பணம் முழுவதையும் வாங்கிக் கொண்டு விட்டாயே. பத்திரங்களும் எழுதிக் கொடுத்திருக்கிறாயே'' என்று கூறி இரு பத்திரங்களைக் காட்டினார்.

ஒன்றில் நான் முன் பணம் லட்சம் வராகன்கள் வாங்கிக் கொண்டதாகவும் மற்றதில் என் சரக்குகளுக்கு இரண்டு லட்சம் வராகன்கள் மதிப்பிட்டு முன்பணம் லட்சம் வராகன் போக மீதப் பணம் லட்சம் வராகன்களை நான் பெற்றுக் கொண்டதாகவும் இருந்தது. இருபத்திரங்களிலும் என் கையொப்பங்கள் இருந்தன. நான் வெற்றுத் தாள்களில் கையொப்பமிட்டுக் கொடுத்திருந்ததால் இவ்விதப் பத்திரங்களை அவர் தயார் செய்து விட்டார். இவரை முழுக்க முழுக்க நம்பினேன். மோசம் போய் விட்டேன். எனக்கு என் சரக்குகள் கிடைக்கச் செய்து நியாயம் வழங்குகள்''

இவ்வாறு மணிகர்ணன் தன் நீண்ட வாக்கு மூலத்தை அளித்து பெருமூச்சு விட்டான்.

(தொடரும்)





# ஓஹோ ஒலிம்பிக்!

தயாரிப்பு
அம்புலிமாமா

SCHOOLNET
www.schoolnetindia.com
nutrine



கிரேக்க தேவதைகளின் பீடம் ஒலிம்பியா கி.மு.1370 முதல் கிரீஸில் விளையாட்டு விழாக்கள் அங்கு வாழ்க்கையின் அம்சமாகி விட்டன.

ஒலிம்பிக் விளையாட்டுகள் தெய்வீகப் போட்டியாக தேவதைகளின் தந்தை ஜெயஸிற்கும் மற்றொரு கிரேக்க தேவதை க்ரோனோஸிற்கும் இடையே நடந்ததாக கவிஞர்கள் கூறுகிறார்கள். இது ஒலிம்பஸ் மலையில் பூவுலக ஆதிக்கத்திற்காக நடந்தது. அதில் ஜெயஸ் வென்று பெரும் விருந்தளித்துக் கொண்டாடினார்.






© 2000 Chandamama. All rights reserved

கிரேக்க தேவதை பெலோப்ஸ் ஹிப்போடோமியாவை மணப்பதில் வெற்றி பெற்றது இது தேரோட்டப்பந்தயத்திலாம். இதனால் தேரோட்டப்பந்தயம் வைக்கப்பட்டு கொண்டாடப்படவே, இவ்வாறு ஒலிம்பிக் பந்தயங்கள் தோன்றின என ஒரு கிரேக்கப் பழங்கதை கூறுகிறது.



வேறு சிலர், தேவதைகளின் தாய் ர்யாவை ஆராதித்து விளையாட்டுகள் ஆரம்பமாயின என்றும் இது கி.மு. 137ல் ஒரு குறிப்பிட்ட இட அமைப்பில் நடந்தது என்றும் கூறுகிறார்கள்.




கிரேக்கமாவீரன் ஹெர்குலஸ் ஒலிம்பிக் போட்டிகளை ஆரம்பித்ததாகவும் கூறுகிறார்கள். அக்யஸ் மன்னன் லாயங்களைச் சரி செய்ய ஹெர்குலஸை வேலைக்கு அமர்த்திக் கொண்டானாம். ஆனால் வேலையை முடித்தும் அவனுக்குப் பணம் கொடுக்கவில்லையாம் கோபமுற்ற ஹெர்குலஸ் அக்யஸை வெட்டிக் கொன்று விட்டு விளையாட்டு விழா நடத்தினானாம்.



அவனுடைய பக்தர்கள் அவன் முன் நெருப்பு மூட்ட விடியும் வேளையில் போட்டி போட்டுக் கொண்டு ஓடினார்கள். அந்த நெருப்பு சூரியனின் முதலாவது கிரணத்தினால் மூட்டப்பட வேண்டுமாம்.






© 2000 Chandamama. All rights reserved




ஜெயஸ் முன் தீ மூட்டி விழாக்களை ஆரம்பித்தனர் அக்காலத்தில் இத்தீயை மூட்டி தீவட்டி சூரியகிரணங்களால் ஏற்றப்பட்டது. குறிப்பிட்ட நாளில் சூரிய வெளிச்சம் இல்லாவிட்டால் விழா தள்ளிப்போடப்படும்.






கி.மு 670 ல் எலிஸ் மன்னன் இபிடஸ் விளையாட்டுகளின் போது ஆயுதங்கள் பயன்படுத்துவதைத் தடைசெய்தான். இது கடும்பகைவர்களான விளையாட்டு வீரர்களை சாந்தமடையச் செய்தது.







தேவதைக்கு ஒரு சிறுவனை பலியிட்டு மாமிசத்தைச் சாப்பிடும் வழக்கம் நீண்டகாலமாக எப்படியோ நடைமுறைக்கு வந்து விட்டது.




இபிடஸ் மன்னனின் ஆணை ஒரு வெண்கலத்தட்டில் மோதிர வரிசைகளில் டால்பியிலுள்ளது போலப் பொறிக்கப்பட்டுள்ளதை இன்றும் காணலாம். இது கடவுள் பதிஉருக்கு நன்மை செய்ய வேண்டும் என்பதற்காகச் செய்யப்பட்டது.







எலிஸிலுள்ள விளையாட்டுப் பயிற்சிக் கூடத்தில் போட்டி இடுபவர்கள் கண்டிப்பாக ஒலிம்பிக் போட்டிகள் ஆரம்பமாகு முன் வந்து பயிற்சி பெற வேண்டும்.






பழங்கால ஒலிம் பிக் போட்டிகள் ஐந்து நாட்கள் நடந் தன. முதல் நாளில் நடுவர்களும் ஆட்ட த்தில் கலந்து கொள் வோரும் நேர்மை யாக நடப்பதாக கையில் ஒரு மாமி சத்துண்டை வைத்துக் கொண்டு பிரமாணம் எடுத்துக் கொள்ள வேண்டும்.




© 2000 Chandamama. All rights reserved















அராச்சியன் அக்காலத்துப் புகழ் பெற்ற சண்டை வீரர். பொன்பத்லானில் மும்முறை ஒலிம்பிக் மகுடம் வென்றவர் மூன்றாவது முறை வென்ற போது அவர் இறந்து விட்டார். அவருடன் போட்டி யிட்டவர் அவரது கழுத்தை நெறித்துக் கொன்றார். ஆனால் நடுவர்கள் அவரது பிணத்திற்கும் மகுடம் சூட்டினர்.




© 2000 Chandamama. All rights reserved

ஒலிம்பிக் பந்தயங்களில் மிகப்பெரு மை மிக்கது தேரோட்டும் பந்தயம். இதில் வெற்றி பெற போட்டி இடுபவர்கள் எந்த முறையையும் கையாண்டு வென்றனர். எதிராளி களின் தேரோட்டிகளுக்கு லஞ்சம் கூடக் கொடுத்தார்கள். அல்லது தேர் களை ஓடும் வழியில் மோதி வீழ்த்தி னார்கள். பரிசுகள் தேர்களின் சொந்தக்காரர்களுக்குத்தான். தேரோட்டி களுக்கு அல்ல.



அலட்சிபயோடெஸ் கி.மு.415ல் வெற்றி பெற்றான். அவன் ஏழு தேரோட்டப் பந்தயங்களில் கலந்து கொண்டு சாதனையோடு முதலாவது இரண் டாவது நான்காவது பரிசுகளையும் தட்டிச் சென்றான்.









தற்போது ஒலிம்பிக் போட் டிகளில் பதக் கங்கள் அளிப்பது போலல்லாமல் அக்காலத்தில் வெற்றி பெற்ற வர்களுக்கு ஆலிவ் இலை வளையங் களும் பனை ஓலைப் பட்டய மும் கொடுக் கப்பட்டன.




© 2000 Chandamama. All rights reserved







ரோமானியர் கிரீஸை வென்ற போது ஒலிம் பிக் விளையாட்டு களை ஆர்வத்துடன் நடத்தினர். அதிசயிக் கத்தக்க போட்டிகளை எல்லாம் ஒலிம்பிக் கில் சேர்த்தனர்.






கி.பி.67ல. ஒலிம்பிக் போட்டிகள் நவீன மயமானது. ஆனால் முதன் முதலாக நடுவர்களில் சிலர் லஞ்சம் பெற்றார்கள்!

நடுவர்களுக்கு லஞ்சம் கொடுத்த முதல் பேர்வழி நீரோ மன்னன். இந்த ரோமனிய மன்னன் தேரோட்டப் பந்தயம் நடக்கையில் தேரிலிருந்து தூக்கி எறியப்பட்டான். போட்டி முழுவதிலும் இருக்கவில்லை. ஆனாலும் அவனே வெற்றி பெற்றதாக அறிவிக்கப்பட்டது!












கிரீஸில் ஒலிம்பியாவிலேயே 1896ல் புதுப்பிக்கப்பட்ட ஒலிம்பிக் விளையாட்டுகளை நடத்த அந்தப் பிரபு நினைத்தார். ஆனால் நவீன வசதிகள் இருக்கவில்லை.




© 2000 Chandamama. All rights reserved

இக்கால ஒலிம்பிக் ன் ஆரம்பம் 1896ல் ஏதன்ஸ் நகரில்

ஒலிம்பிக் விளையாட்டுத் தலம் தாராள மனமிக்க கிரேக்க பணக்காரர் கியான் காஸ் அவரோப்பின் நன்கொடை 920,000 தங்கடிரோச்மாஸ் கொண்டு புதுப்பிக்கப்பட்டது.















இந்த விளையாட்டுகளின் சிகரம் மாபெரும் ஓட்டப் பந்தயம். இந்த கிரேக்கப் பந்தயத்தில் ஸ்பைரிடோன் லூயி என்ற கிரேக்கர் வெற்றி பெற்றார். அவர் விளையாட்டுத் தலத்திற்கு ஓடி வந்தபோது அவருடன் அரசகுமாரர்களான ஜார்ஜும் நிகோலோஸும் சேர்ந்து கொண்டு கடைசி வரை ஓடினார்கள். ஒரு கிரேக்க நாவிதர் அந்த வீரருக்கு அவரது வாழ்நாள் முழுவதும் க்ஷவரம் செய்வதாக வாக்களித்தார். ஒரு உணவகத்தவர் அவருக்கு அதுபோல் உணவு அளிப்பதாக உறுதிகூறினார்.



© 2000 Chandamama. All rights reserved

பாரிஸில் 1900ல் முதல் முறையாக ஒலிம்பிக் இலச்சினை ஏற்கப்பட்டது. அது சிடியஸ் அல்டியஸ் போர்டியஸ் (வேகமானது, உயரமானது, வலுவானது) என்பதாகும். டொமினிகன் சன்னியாசி ஒருவரின் இச்சொற்கள் 1897ல் நடந்த உலக ஒலிம்பிக் கமிட்டி கூட்டத்தில் ஏற்கப்பட்டது. பாரிஸின் மாபெரும் காட்சியில் ஒரு பகுதியாக இவ்விளையாட்டுகள் இரண்டு மாதங்களுக்கு நடைபெற்றன.






பாரிஸ் ஒலிம்பிக்ஸில் முக்கியமானதாக நெடு நாள் பகைவர்களான பிரான்ஸும் ஜெர்மனியும் கால்பந்தாட்டத்தில் மோதின. இது ஒரு பெரும் சிக்கல். பிரான்ஸ் 25 கோல் போட்டு 16 கோல் போட்ட ஜெர்மனியை தோற்கடித்தது.




ஒலிம்பிக் விளையாட்டுகளில் முதல் முறையாகப் பெண்கள் கலந்து கொள்ள அனுமதிக்கப்பட்டனர். பிரிட்டனின் சார்லோட் கூப்பர் டென்னிஸ் ஒற்றையர் ஆட்டத்தில் வெற்றி பெற்று பதக்கத்தைக் கைப் பற்றிய முதலாவது ஒலிம்பிக் வீராங்கனை என்ற பெயரும் பெற்றார்.












© 2000 Chandamama. All rights reserved

ஒரு அருவருக்கத் தக்க நிகழ்ச்சி பிரிட்டிஷ், அமெரிக்கர்களுக்கிடையே போட்டிகள் நடந்த போது நடந்து விட்டது. 400 மீ. ஓட்டப் பந்தயத்தில் அமெரிக்க ஓட்டக்காரர் கார்பெண்டர் தம்மோடு போட்டி யிட்டவருக்கு இடைஞ்சல் செய்ததால் விளையாட்டிலிருந்து நீக்கப் பட்டார். ஓட்டப் பந்தயம் மீண்டும் வைக்கப் படவே அதில் கலந்து கொள்ள அமெரிக்கர்கள் மறுத்து விட்டார்கள். அதனால் தங்கப்பதக்கம் பிரிட்டனின் ஹோல்ஸ் வெல்லிற்கு அளிக்கப்பட்டது.

போட்டியிடுவோர் இல்லாமல்



ஐந்தாவது ஒலிம்பிக் விளையாட்டுகள் 1912ல் ஸ்டாக் ஹோமில் நடை பெற்றன. விஞ்ஞான நுட்பமாய் முதல் முறையாக நேரம் காட்டும் சாதனங்களையும் புகைப்படங்கள் எடுக்கும் கருவி களையும் பயன்படுத்தி நடுவர்களுக்கு உதவி செய்யப்பட்டது. ஜிம் த்ரோப் என்ற அமெரிக்க விளையாட்டு வீரர் மக்களைத் தம் விளையாட்டுகளால் வெகுவாகக் கவர்ந்தார்.






போர் முடிந்ததும் 1920ல் ஆண்ட்வர்ப்பில் நடந்த ஒலிம்பிக்ஸில் தான் ஐந்து வளையங்கள் கொண்ட ஒலிம்பிக் கொடி பறக்க விடப் பட்டது. டெல்பியிலுள்ள ஐந்து வளையங்களைக் கண்டே இந்த ஐந்து வளையங்கள் ஐந்து நிறங்களில் உலகின் ஐந்து பகுதிகளைச் சேர்த்துக் காட்டுவதாக அமைக்கப்பட்டன.




ஒலிம்பிக் பிரமாணத்தை முதலில் எடுத்துக் கொண்டவர் விக்டர் போயன் என்ற பெல்ஜிய விளையாட்டு வீரர்.






(எட்டாவது ஒலிம்பிக் விளையாட்டுகள்) ஒலிம்பிக் விளையாட்டுகள் மீண்டும் 1924ல் பாரிஸில் நடந்தது. உலக ஒலிம்பிக் குழுவின் தலைவரான கூபர்ட்டினுக்கு அது கடைசி ஆண்டு. இந்த எட்டாவது ஒலிம்பிக்கில் பூவோ நர்மி என்பவர் சிறந்த ஓட்டக்காரராக மக்களைக் கவர்ந்தார். பின்லாந்தைச் சேர்ந்த இவர் 1920, 1924 மற்றும் 1928லும் பல ஒலிம்பிக் பதக்கங்களை வென்றவர். பாரிஸில் இவர் 1500, 5000 மற்றும் 10,000 மீ. ஓட்டப்பந்தயங்களில் தங்கப் பதக்கங்களை வென்றவர். சரியான நேரத்தில் பந்தயத்தை முடிக்க இவர் ஒரு நில்விசை கடியாரத்தை வைத்திருந்தார்.

சாதனைகளை முறியடிக்க நில்விசை கடியாரத்தை பார்த்து...




© 2000 Chandamama. All rights reserved

ஆம்ஸ்டர்டாமில் 1928ல் நடந்த ஒன்பதாவது ஒலிம்பிக் போட்டிகளில் இந்தியா ஹாக்கியில் நெதர்லாந்தை 3-0 என்று தோற்கடித்து தங்கப்பதக்கத்தைக் கைப்பற்றியது. முதன் முறையாக ஸ்கோர் போர்டு இங்கு வைக்கப்பட்டதோடு ஒலிம்பிக் ஜோதி தொடர்ந்து எரிந்து கொண்டே இருந்தது.




அமெரிக்காவின் லாஸ் ஏஞ்ஜெல்ஸில் 1932ல் ஒலிம்பிக் விளையாட்டுகள் நடைபெற்றன. முதன்முறையாக ஒலிம்பிக் கிராமம் என்று இங்கு அமைக்கப் பட்டது. இதில் ஒலிம்பிக் போட்டிகளில் கலந்து கொள்ள வந்த எல்லா நாட்டு வீரர்களும் இருக்க வசதிகள் செய்து தரப்பட்டன.




லாஸ் ஏஞ்ஜெல்ஸில் தான் வெற்றி மேடை முதன் முதலாக அமைக்கப்பட்டது. பரிசளிக்கும் விழாவும் பல நாடுகளின் தேசிய கீதங்கள் முழங்க அந்நாட்டுக் கொடிகளும் ஒலிம்பிக்கில் முதல் முறையாகப் பறக்க விடப்பட்டன.



பெர்லினில் நடந்த பதினோறாவது ஒலிம்பிக்கில் நாஜிகளின் ஆதிக்கம் தலைதூக்கி இருந்தது. எங்கு பார்த்தாலும் நாஜி கொடிகளும் ஹிட்லர் வாழ்க என்ற கோஷங்களுமே இருந்தன.




முதன் முறையாக ஒலிம்பிக் விளையாட்டுகள் தொலைக் காட்சியில் ஒளிபரப்பப்பட்டு ஒலிக்கவும் செய்தன.

அடடே! உம் இரும்பு அப்படி.. செயல்படு...

ஆம் முதலில் என் பெயரைக் காத்துக் கொள்ள வேண்டும்.



















© 2000 Chandamama. All rights reserved









மற்றவெல்ல முடியாதவர் அமெரிக்காவின் கேசியஸ் கிளே. இவர் பின்னர் முகம்மது அலி என்றாகி குத்துச் சண்டை வீரராகப் புகழ் பெற்றார். இவர் தங்கப் பதக்கத்தை வென்ற போது இவருடைய வயது 18 தான்!

ஓ! என்ன அடக்கம்!

ஜப்பானின் டோக்கியோவில் 1964ல் ஒலிம்பிக்ஸ் விளையாட்டுப் போட்டிகள் நடைபெற்றன. கிழக்கத்திய நாடுகளில் முதலில் ஜப்பான் தான் ஒலிம்பிக் போட்டிகளை நடத்தியது. ஜப்பானியர் மிகுந்த உற்சாகத்துடன் கடும் மழையையும் பொருட்படுத்தாமல் விளையாட்டுத் தலத்தில் கூடினார்கள்.

குடைகளை வைத்துக் கொண்டு பார்க்கும்...

© 2000 Chandamama. All rights reserved

மெக்ஸிகோவில் 1968ல் நடந்த ஒலிம்பிக்கில் தான் ஒலிம்பிக் ஜோதியை ஏற்றும் பெருமை என்ரிக்வேடா பாசிலியோ என்ற பெண்மணிக்குக் கிடைத்தது. ஒரு பெண்மணி ஒலிம்பிக் ஜோதியை ஏற்றுவது இதுவே முதல் தடவை.

பெண்கள்! பெண்கள்!! எங்கும் இருக்கிறார்களே!

ஒலிம்பிக் விதிகளை மறந்தார்களா? பெண்களே கூடாதே.

மூடுவாயை எல்லாம் அவர்களுக்குத் தெரியும் கொடுக்கட்டும். பெண்களுக்கும் வாய்ப்பு!

மெக்ஸிகோ ஒலிம்பிக்ஸ் கடல் மட்டத்திற்கு மேல் 7500 அடி உயரத்தில் நடைபெற்றது. இது தாண்டும் பந்தயங்களுக்கு மிக்க உதவியது. அமெரிக்காவின் பாப்பீமென் நீள்தாண்டுதலில் 8.9மீ. தூரத்தைத் தாண்டி தம் சாதனையை வெகுகாலம் வரை நிலைத்திருக்கச் செய்தார். அவருக்கு அங்கு வீசிய காற்று பெரிதும் உதவியது.

ஓ! சாதனை படைக்க இனி சந்திர மண்டலத்தில் தான் ஒலிம்பிக்ஸ்!

இந்த உயரத்தாண்டு போட்டிகளில் புதிய உத்திகள் கடைபிடிக்கப்பட்டன. இது அமெரிக்க விளையாட்டு வீரர் டிக் போஸ்பரியின் பெயரில் போஸ்பரி உத்தி எனப் பெயரிடப்பட்டது. இவர் மேல் மட்ட இரும்புக் கழியின் பின்புறமாக முதுகை நீட்டி கால்களை உயரத் தூக்கி உயரக் குதித்துக் காட்டினர்.

சபாஷ்

ஓ. கடவுளே

என் வார்த்தை!

விதிமுறைகளுக்கு உட்பட்ட தல்ல நீ அதை செய்ய முடியாது

மியுனிக்கில் 1972ல் நடந்த ஒலிம்பிக்கில் கோரசம்பவம் நிகழ்ந்தது. முகமூடியணிந்த பாலஸ்தீனிய பயங்கர வாதிகள் இஸ்ரேல் குழுவின் 11 உறுப்பினர்களை செப்டம்பர் 5ல் படுகொலை செய்தனர்.

பின்லாந்தின் லாஸ்வீரன் 5000மீ, 10,000மீ பந்தயங்களை வென்றார். இது போல் 1912ல் ஹேன்னஸ்கோ லெஹ்மென்னும் 1952ல் எமில் ஜோடோபெக்கும் 1956ல் எவ்லாடினியர் குட்ஜும் 5000மீ, 10,000மீ பந்தயங்களை வென்றிருக்கிறார்கள். குட்ஜ் ரெயின்டீர் என்ற வகைமான்பாலைக் குடித்து வளர்ந்தவர்.

MILK

உகாண்டாவின் ஜான் அகியீவா என்ற ஆப்பிரிக்கர் 400மீ தடங்கல் ஓட்டப் போட்டியில் வென்று தங்கப் பதக்கத்தை வென்றது குறிப்பிடத்தக்கதாகும்.






இவ்விளையாட்டுகளில் அரசியல் புகுந்து விட்டது. மாஸ்கோவில் 1980ல் நடந்த ஒலிம்பிக்ஸில் அமெரிக்கா, பாகிஸ்தான், ஜெர்மனி, ஆஸ்திரேலியா, ஹாலந்து ஆகிய நாடுகள் கலந்து கொள்ளவில்லை. இந்தப் போட்டிகளில் பிரிட்டனின் ஸ்டெவ் ஒவெல்டிற்கும் செஸ்டின் கோவிற்கும் இடையே ஓட்டப் பந்தயத்தில் கடும் போட்டி ஒவெல்ட் 800மீ ஓட்டத்தி லும் கோ 1500 மீ ஓட்டத்தி லும் வெற்றி பெற்றனர்.




இரும்புத்திரை நாடுகள் லாஸ் ஏஞ்ஜெல்ஸில் நடந்த ஒலிம்பிக்ஸில் கலந்து கொள்ளவில்லை.
அமெரிக்காவின் கார்ல்லூவிஸ் 4 தங்கப்பதக்கங்களை தேகப்பயிற்சி விளையாட்டுகளில் வென்றார். இவரது விளையாட்டுகள் 100மீ, 200 மீ நீள் தாண்டல், ரிலேரேஸ்.



சியோலில் 1988ல் நடந்த ஒலிம்பிக்ஸின்போது ஒரு அசம்பாவிதம் நடந்தது. 100மீ ஓட்டப்பந்தயத்தில் தங்கப் பதக்கத்தைக் கனடாவின் பென் ஜான்ஸன் வென்றார். ஆனால் பிறகு அவர் போதைமருந்தைப் பயன்படுத்தியுள்ளார் என்று குற்றம்சாட்டப்பட்டு அவரது தங்கப் பதக்கம் பறிக்கப்பட்டது. அதிலிருந்து விளையாட்டு வீரர்களுக்கு போதைமருந்துப் [illegible]. 100க்கு மேற்பட்ட போதை பொருள்கள் தடை செய்யப்பட்டன. நவீன சோதனை முறைகள் கையாளப்பட்டன.

© 2000 Chandamama. All rights reserved




பார்சிலோனாவில் 1992ல் நடந்த ஒலிம்பிக் விளையாட்டுகள் நல்ல ஒலிம்பிக் போட்டி களாக இருந்தன. எல்லா நாடுகளுமே இதில் கலந்து கொண்டன. சிறு நாடுகளான எஸ்டோனியா, லாட்வியா போன்றவைகளும் இதில் கலந்து கொண்டன.

உக்ரேனின் செர்ஜி புப்கா இங்கு போல்வால்டில் சாதனை புரிந்தார். பார்சிலோனாவில் இவரால் சாதிக்க முடியாதது இங்கு நிறைவேற்றப்பட்டது.




இந்த நூற்றாண்டின் இறுதியில் ஒலிம்பிக்ஸ் அமெரிக்கவில் அட்லாண்டாவில் 1996ல் நடந்தது. இது முழுக்கத் தனி நபர்கள் கொடுத்த பணத்தைக் கொண்டு நடத்தப் பட்டது.


















© 2000 Chandamama. All rights reserved








# ஒலிம்பிக் புதிர்



1. ஒரு நிமிடத்திற்குள் 100 மீ நீச்சல் போட்டியில் வென்ற முதல் மனிதர் யார்?
2. ஒருவர் 1936ல் பெர்லின் ஒலிம்பிக் போட்டிகளில் சிறிது நேரம் உயிரற்றவர் போல இருந்து அச் சாதனையை புகைப்படமாக பிற்காலத்தவர் காண விட்டுச்சென்றார். வீடியோ எடுக்கப்பட்ட முதல் ஒலிம்பிக் இது அவர் யார்?
3. மனிதமான் என்றுபட்டம் பெற்ற எந்த ஆஸ்திரேலிய விளையாட்டு வீரர் 1500 மீ. தூரஓட்டத்தை குறைந்த நேரசாதனையில் வென்றார்?
4. தம் 65வது வயதில் போட்டியிட்டுத் தம் நாட்டிற்குத் தங்கப்பதக்கத்தை வென்று கொடுத்தவர் யார்?
5. தங்கப்பதக்கத்தை எப்போது முதன் முதலாக இந்திய ஹாக்கிக் குழு வென்றது? எப்போது முதலாவதாகத் தோற்றது?
6. தொடர்ச்சியாக ஒலிம்பிக் ஜோதி ஏற்றப்பட்டு முதலாவது ஓட்டப்பந்தய வீரரால் இரண்டாவது பந்தயவீரரிடம் கொடுக்கப்பட்டது. மூன்றாவது வீரர் ஜோதியை வாங்கக்காத்திருந்தபோது இரண்டாவது வீரர் ஏனோ வரவில்லை. ஒலிம்பிக் போட்டிகள் வரலாற்றிலேயே முதன் தடவையாக ஒலிம்பிக் ஜோதி திருடப்பட்டது. இது எப்போது நிகழ்ந்தது?
7. அட்லாண்டா ஒலிம்பிக் போட்டிகளில் 1996ல் அளிக்கப்பட்ட பதக்கங்கள் முந்தைய போட்டிப் பதக்கங்களை விட எவ்வாறு மாறுபட்டிருந்தன?
8. ஒலிம்பிக் போட்டியில் மார்க்ஸ்பிட்ஸ் எவ்வாறு புகழ் பெற்றார்?
9. ஒருவர் உயரத்தாண்டுதல் போட்டியில் 28 அடிக்கும் மேல் தாண்டிய முதல் விளையாட்டு வீரர். போட்டியில் முதலாவது தாண்டலிலேயே 29 அடி 2½ அங்குலம் தாண்டினார். அவர் யார்?
10. தனிப்பட்டவர் போட்டியில் ஒலிம்பிக் பதக்கம் வென்ற முதலாவது இந்தியர் யார்?

## விடைகள்

1. அமெரிக்காவின் ஜானி வெய்ஸ்முல்லர். பின்பு இவர் டார்ஜான் என்று புகழ் பெற்றார்.
2. லேனிரெய்பென்ஸ்ட்ஹால்
3. ஆஸ்திரேலியாவின் ஹெர்ப்எலியட் 3 நிமிடம் 35.6 நொடிகளில் ரோம் 1960 போட்டியில் 1500மீ ஓட்டப்பந்தயத்தில் வெற்றி பெற்றார்.
4. ஸ்வீடனின் ஆஸ்கார் ஸ்வாஹன் தனிப்பட்ட மான் ஓட்டப்பந்தயத்தில் 1412 ஸ்டாக் ஹோம் ஒலிம்பிக் பந்தயத்தில் தம் நாட்டின் குழு வெற்றிபெறச் செய்தார். அப்போது இவரது வயது 65 ஆண்டுகள்.
5. ஒலிம்பிக் போட்டிகளில் 1948ல் ஆம்ஸ்டர்டாமில் நடந்தபோது இந்திய ஹாக்கி குழு முதல் முதலாக தங்கப் பதக்கத்தை வென்றது. நீண்ட கால இடைவெளிக்கு பின் 1960-ல் ரோமில் நடந்த ஒலிம்பிக் போட்டிகளில் முதல் முறையாகத் தோற்றது.
6. பார்ஸிலோனியாவில் 1992ல் ஒலிம்பிக் போட்டிகள் நடக்கப் போகையில் ஒலிம்பிக் ஜோதி திருடப்பட்டது.
7. அட்லாண்டிக் ஒலிம்பிக் போட்டிகளில் அளிக்கப்பட்ட பதக்கங்களின் ஒரு பக்கத்தில் அந்தந்த விளையாட்டுகள் பொறிக்கப்பட்டும் மறு பக்கம் ஒலிம்பிக் இலச்சினையான ஐந்து வளையங்கள் பொறிக்கப்பட்டும் இருந்தன.
8. மார்க்ஸ்பிட்ஸ் ஏழு தங்கப் பதக்கங்களை நீச்சல் போட்டிகளில் மியூனிக் ஒலிம்பிக் போட்டிகள் 1972ல் நடந்தபோது வென்றும் தொடர்ந்து ஏழு ஒலிம்பிக் சாதனைகளை முறியடித்தும் புகழ் பெற்றார்.
9. மெக்ஸிகோ நகரில் 1968ல் நடந்த ஒலிம்பிக் பந்தயங்களில் பாப்பீமோன்.
10. பாரிஸில் 1900ல் நடந்த ஒலிம்பிக் போட்டிகளில் 250 மீ ஓட்டப்பந்தயத்தில் வெள்ளிப்பதக்கம் வென்ற நார்மன் பிரிட்சார்ட்



Visit www.schoolnetindia.com

# நிகழ்ச்சி புதிர்













**உங்களால் உதவ முடியுமா?**

இதில் நீங்கள் எவ்வளவு ஒலிம்பிக் விளையாட்டுகளைக் கண்டு கூற முடியும்? எல்லாவற்றையும் சரி யாகக் கண்டு கூறிவிட்டால் நீங்கள் கெட்டிக்காரரே!

---

## அதிர்ஷ்டக்காரப் போட்டி

பல நாட்டுக் கொடிகளை அடையாளம் காண முடியுமா? சரி, அப்படி யானால் இந்தக் கொடிகளை அடையாளம் காணுங்கள் பார்க்கலாம்! இதற்காக அதிர்ஷ்டக்காரக் குறிப்புகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. எந்த ஒலிம்பிக் போட்டி எந்த அதிர்ஷ்டக்காரமானது என்பதைப் பொருத்திப் பாருங்கள்















Visit www.schoolnetindia.com

## ஒலிம்பிக்ஸில் அதிர்ஷ்டக்காரக் குறிகள்

வாழி காண்தல்: அமித் ஒலிம்பிக் ஜோதியை ஏற்றும் வாய்ப்பு பெற்றான். ஆனால் போட்டித்தலத்தை அடைந்ததும் அங்கு நிகழ்பவை கண்டு திகைக்கிறான். அவனுக்கப்போகவழி தெரியவில்லை.



Visit www.schoolnetindia.com

© 2000 Chandamama. All rights reserved

விடைகள் :

| இதோ | விடைகள் : |
| --- | --- |
| 1. சாம்மி, தென்கொரியா | 1. சாம்-பருந்து-அமெரிக்காவில் லாஸ் ஏஞ்ஜெல்ஸில் 1984ல் நடந்த அதிஷ்டக்காரக் குறி |
| 2. கோபி, கனடா | 2. கோபி-பூனை-ஸ்பெயினில் பார்ஸிலோனாவில் 1992ல் நடந்த ஒலிம்பிக்ஸில் அதிர்ஷ்டக்காரக்குறி |
| 3. ஹோடோரி, அமெரிக்கா (யு.எஸ்.ஐ) | 3. ஹோடோரி-புலி-தென்கொரியாவில் சியோலில் 1988ல் நடந்த ஒலிம்பிக்ஸில் அதிர்ஷ்டக்காரக் குறி |
| 4. ஒலி, மில்லி, சையத், ஸ்பெயின் | 4. ஒலி- மில்லி- சயத்- ஆஸ்திரேலியாவில் சிட்னியில் 2000ல் நடக்கும் ஒலிம்பிக்ஸின் அதிர்ஷ்டக்காரக் குறிகள். |
| 5. வால்டி, ஆஸ்திரேலியா | 5. வால்டி - நாய் - கனடாவில் மாண்ட்ரீலில் 1976ல் நடந்த |

# உல்லாசம் உற்சாகம் உண்டாகுமே...!



நான் எங்கப்பா, அம்மா அண்ணனோட அதிசயம் தீம்பார்க் போனேன். அடேயப்பா! எவ்வளவு பெரிய பார்க்தெரியுமா குட்டிகடல், சறுக்கி விளையாட ஸ்லைடு, ஜாலியா போட்டிங், குட்டிகுட்டியா நிறைய ட்ரைன், டோரா டோரா த்ரில்லான வாட்டர் சூட் இப்படி நிறைய்ய விளையாட்டு. ஒரு நாள் முழுக்க ஜாலியோ ஜாலி மறுபடியும் நான் அதிசயம் தீம்பார்க் போகப் போறேன். என்ன நீங்க போகலையா, அப்ப சீக்கிரம் உங்க குடும்பத்தோட கிளம்புங்க. ஓ கே வா...











வெளியிலிருந்து கொண்டு வரும் உணவு பொருட்களுக்கு அனுமதி இல்லை.

**அனுமதி கட்டணம்**
பெரியவர்கள்-Rs.200/-
குழந்தைகள்-Rs.150/-

**பூங்கா அனுமதி நேரம்**
காலை 10.00 மணி முதல்
மாலை 6.30 மணி வரை







**MORE WATER... MORE FUN...**

**மதுரை-திண்டுக்கல் ரோடு, பரவை, மதுரை.**

SASI/MDU/2K

# பதிலடி கொடுத்தான்!

கோட்டையூரில் எப்போதும் தண்ணீர்ப் பஞ்சமே. அதனால் அவ்வூரில் முருகையயன் என்பவன் தண்ணீர் கொண்டு வந்து கொடுத்து பத்து குடும்பத்தினரிடமிருந்து மாதம் பத்து ரூபாய் வீதம் வசூலித்து வந்தான். அவன் ஒரு நாள் கூடத்தவறாமல் நீர் கொண்டு வந்து கொடுத்ததால் எல்லோரும் அவனைப் பாராட்டி வந்தார்கள்.

ஒரு முறை அவன் காலில் முள் தைத்து விடவே அவனால் நடக்க முடியாது போயிற்று. அவனால் மூன்று நாட்களுக்குத் தண்ணீர் கொண்டு வந்து கொடுக்க முடியவில்லை. அது பற்றி லட்சியம் செய்யாமல் ஒன்பது குடும்பத்தினர் மாதக்கடைசியில் அவனுக்கு பத்து ரூபாய் வீதம் கொடுத்தனர். ஆனால் கஞ்சத்திற்குப் பெயர்போன குப்பண்ணன் மட்டும் ஒரு ரூபாய் குறைத்து ஒன்பது ரூபாய் கொடுத்தான்.

முருகையயன் அவனிடம் ''ஐயா! ஒரு நாளும் நான் தண்ணீர் கொண்டு வந்து கொடுக்காமல் இருந்ததில்லை. முள்குத்தியதால் மூன்று நாட்கள் நடக்க முடியவில்லை. அதனால் தான் தண்ணீர் கொண்டு வர முடியவில்லை. இதற்காக ஒரு ரூபாய் குறைக்கிறீர்களே. இது சரியல்ல'' என்றான். குப்பண்ணனோ ''உனக்கு எவ்வளவோ சிரமங்கள் இருக்கலாம். அதற்காக நானா நஷ்டப்பட வேண்டும்?'' என்றான்.

சில நாட்களாயின. குப்பண்ணன் வீட்டிற்கு அன்று திடுதிப்பென பத்து பேர் விருந்தாளிகளாக வந்து விட்டார்கள். அதை அறிந்த முருகையயன் அன்று குப்பண்ணன் வீட்டிற்குத் தண்ணீர் கொண்டு போய்க் கொடுக்கவில்லை. குப்பண்ணன் முருகையனைக் கூப்பிட்டு ''என்னப்பா இது! நீ தண்ணீர் கொண்டு வந்து கொடுக்க விட்டால் நான் எவ்வளவு கஷ்டப்பட வேண்டும் தெரியுமா?'' என்று கூறி கோபித்துக் கொண்டான்.

அப்போது முருகையயன் ''உங்களுக்கு எவ்வளவோ சிரமங்கள் இருக்கலாம். அதற்கு நான் என்ன செய்ய முடியும்? வேண்டுமானால் எனக்குக் கொடுக்கும் பத்து ரூபாயில் ஒரு ரூபாய் குறைத்துக் கொள்ளுங்கள்'' என்றான்.

குப்பண்ணன் திகைத்துப் போனான்!



55.பாண்டவர் வெற்றிக் களிப்பு

# மகாபாரதம்

இரண்டாவதுநாள் போரில் உச்சிப் பொழுது கழிந்ததும் கௌரவர் பக்க வீரர் களான அசுவத்தாமன், கிருபர், சல்லியன் ஆகியோரும் பாண்டவர் பக்க வீரர் களான திருஷ்டத்யும்னன், அபிமன்யு வும் தாக்குதலை ஆரம்பித்தனர். அதன் பின் துரியோதனனின் மகன் லட்சுமண குமாரனுக்கும் அபிமன்யுவுக்குமிடையே கடும் போர் மூண்டது. அதில் லட்சுமண குமாரன் தோற்றுப் போகும் நிலை ஏற்பட்டது. அப்போது அவனுக்கு உதவ துரியோதனனும் சில கௌரவ வீரர்களும் போய் அபிமன்யுவைச் சூழ்ந்து கொண்டார்கள்.

அபிமன்யுதன்னைஎதிர்த்தவர்களுடன் போர்புரியவே அவனுக்கு உதவ அர்ஜுனன் வந்தான். அது கண்டு பீஷ்மரும், துரோணரும், மற்றும் சில மகாரதர்களும் அங்கு வந்தனர். ஆனால் அர்ஜுனன் மிகப் பயங்கரமாகப் போராடி கௌரவ வீரர்களை விரட்டி அடித்தான்.

அப்போது பீஷ்மர் துரோணரிடம் ''இந்த அர்ஜுனனை இப்படியே விட்டு விட்டால் கௌரவப் படையையே அழித்து விடுவான். இப்போது நம் வீரர்கள் பயந்து ஓடிக் கொண்டிருக்கிறார் கள். அவர்களைத் திரும்பிக் கொண்டு வரவும் இயலாது. மாலைப் பொழுதும்





சாய்ந்து விட்டது. எனவே இன்றையப் போரை இத்துடன் நிறுத்திவிடுவோம்'' எனக் கூறிப் போரை நிறுத்தினார். இரு தரப்பினரும் தத்தம் கூடாரங்களுக்குச் சென்றனர்.

மூன்றாவது நாள் போர் மறுநாள் காலை ஆரம்பமாகியது. கௌரவப் படை கருடவியூகம் அமைத்து நின்றது. பாண்டவப் படை அர்த்த சந்திர வியூகத்தில் நின்றது. போர் ஆரம்பமானதும் துரியோதனன் தன் வீரர்களோடு கடோத்கசனைத் தாக்கினான். பாண்டவர்கள் பீஷ்மரையும் துரோணரையும் எதிர்க்கலாயினர். அபிமன்யுவும் சாத்தியகியும் சகுனியுடன் போர்புரிந்தார்கள். அர்ஜுனன் கௌரவப் படையின் ரத வீரர்களை அடித்து வீழ்த்தினான். பீஷ்மரும் துரோணரும் பாண்டவப் படை வீரர்களை அடித்துத் துரத்தினார்கள். அது கண்டு பீமனும் கடோத்கசனும் கௌரவப் படையைப் பயங்கரமாகத் தாக்கி நிலை குலையச் செய்தனர்.

பயந்து ஓடும் கௌரவப் படை வீரர்களைப் போர் களத்திற்கு வரச் செய்ய பீஷ்மராலும் துரோணராலும் முடியவில்லை. துரியோதனன் விரைந்து சென்று அந்த வீரர்களைப் போர்க்களத்திற்குப் போகச் செய்தான். பிறகு அவன் பீஷ்மரிடம் போய் ''பிதாமகரே! நீங்கள் போர்க்களத்தில் இருக்கையில் நம் படை வீரர்கள் பயந்து ஓடுவது எவ்வளவு பெருத்த அவமானம்! உங்களுக்குப் பாண்டவர்கள் மீது மிகுந்த பாசம் உள்ளது. அதனால்தான் அவர்களது படைகளைக் கடுமையாகத் தாக்காமல் விட்டுவிடுகிறீர்கள். போர் ஆரம்பிப்பதற்கு முன் இப்படிப் பட்ட பாசம் தங்களுக்கு இருப்பதாகக் கூறி இருக்கலாமே. நீங்கள் முழு மனதுடன் போர் புரியாவிட்டால் நம் படைகளின் கதி என்ன ஆகும்?'' என்று சலித்தவாறே கூறினான்.

பீஷ்மர் இது கேட்டு கோபம் அடைந்த போதிலும் புன்னகையை வரவழைத்துக் கொண்டு ''பாண்டவர்களை வெல்ல தேவேந்திரனால் கூட முடியாது என்று நான் உன்னிடம் ஏற்கனவே கூறி இருக்கிறேனே! என்னால் முடிந்தவரை போரிட்டுக் கொண்டுதான் இருக்கிறேன். இனியும் போராடுவேன். அதை நீயே பார்'' என்றார். இதன்பின் அவரது தாக்குதல் பயங்கரமாக இருந்தது. அவர் பாண்டவ வீரர்களை ஒருவர் விடாமல் தாக்கவே துரியோதனன் அது கண்டு

மகிழ்ந்து போனான்.

இதைக் கண்டு கிருஷ்ணர் அர்ஜுனனிடம் "அர்ஜுனா! பீஷ்மரின் தாக்குதல் கடுமையாகி விட்டது. நம் வீரர்கள் பயந்து நடுங்குகிறார்கள். நீ பீஷ்மரை எதிர்த்து அவரது தாக்குதலை முறியடி" என்றார். அர்ஜுனன் கிருஷ்ணர்கூறியபடி பீஷ்மரைஎதிர்த்துப் போர்புரியலானான். அவரது வில்லைத்தன் அம்பால்துளைத்து ஒடித்தான். பீஷ்மர் அர்ஜுன னின் திறமையை மனதிற்குள் பாராட்டிய வாறே வேறொரு வில்லை எடுத்துக் கொண்டார். இருவரிடையே போர் சூடு பிடித்தது. ஆயினும் அர்ஜுனன் பீஷ்மரை இன்னும் கடுமையாகத் தாக்க வேண்டு மெனகிருஷ்ணர் நினைத்தார். இப்படியே அர்ஜுனன் போர் புரிந்து கொண்டிருந் தால் பீஷ்மரின் தாக்குதலில் பாண்டவப் படை மிக விரைவில் குறைந்து விடுமே என அவர் அஞ்சினார். அப்போது பல கௌரவ வீரர்கள் அர்ஜுனனைச் சூழ்ந்து கொள்வதைக் கண்டு சாத்தியகி அவனுக்கு உதவ விரைந்து வந்தான். ஓடும் பாண்டவப் படை வீரர்களுக்கு தைரிய மூட்டினான். அப்போதும் அவர்கள் பயந்து ஓடிக் கொண்டிருக்கவே கிருஷ் ணர் "சாத்தியகி! ஓடுபவர்கள் ஓடட்டும். விட் டுவிடு. நான் இந்த பீஷ்மரையும் கௌரவப் படையையும் என் சக்கராயுதத் தால் அழித்து விடுகிறேன்" என்று ஆவேசத்துடன் கூறி சக்கராயுதத்துடன் தேரைவிட்டுக் கீழே இறங்கினார்.

சக்கராயுதத்துடன் தம்மை நோக்கி வரும் கிருஷ்ணரைக் கண்டு பீஷ்மர் "கிருஷ்ணா! உன் கையால் நான் மடியும் பாக்கியத்தை விட வேறு என்ன உயர் வாகப் பெற்று விடப் போகிறேன்"? என்று அமைதியுடன் கூறினார்.





கிருஷ்ணரும் பீஷ்மரருகே போய் "இந்தப் போருக்கே மூல காரணம் நீங்கள்தாம். அன்று சூதாடக் கூடாது என்று துரியோதனனை நீங்கள் தடுக்கவில்லை. இப்போதோ அவ னைக் காக்க வந்திருக்கிறீர்கள். இதுதான் உங்கள் தர்மமா?" என்று கேட்டார்.

இதற்குள் அர்ஜுனன் ஓடோடி வந்து கிருஷ்ணரிடம் "ஆத்திரப்படாதீர்கள். நீங்கள் போர்க் களத்தில் ஆயுதம் எடுக்கப் போவதில்லை என்று கூறினீர் களே. அதை மறந்து இப்படி ஆவேசப் படலாமா? நான் கடும் போர் புரிந்து கௌரவர்களைத் தோற்கடிக்கிறேன். நீங்கள் வந்து ரதத்தில் அமருங்கள்" என்று வேண்டினான். அதைக் கேட்டு திருப்தி அடைந்தவராகத் திரும்பிப் போய் ரதத்தில் சாரதியின் இடத்தில் அமர்ந்தார். அர்ஜுனனும் அத்தேரில் ஏறி உட்கார்ந்து கடும் போர் புரியலா னான். அவன் பீஷ்மருடனும், பூரிசிரவசு டனும், சகுனியுடனும் பயங்கரமாகப் போர் புரியலானான். அர்ஜுனனின் அம்புகளால் கௌரவ வீரர்கள் அடி பட்டு விழுந்து கொண்டே இருந்தனர். அர்ஜுனனோடு விராடனும் துருபதனும் சேர்ந்து கௌரவப் படையைத் தாக்கலானார்கள். அர்ஜுனன் இந்திராஸ்திரத்தைப் பிரயோகித்து பீஷ்மரையும் துரோணரையும் பின் வாங்கச் செய் தான். இது கண்டு கௌரவப் படை பயந்து ஓடியது. அப்போது சூரியன் மறையும் வேளையாகி விடவே தருமர் அன்றையப் போரை நிறுத்தி விட்டுத் தம் கூடாரத்திற்குச் சென்றார்.

நான்காவது நாள் காலையில் மீண்டும் போர் ஆரம்பமாகியது. அன்று பீஷ்மர் மிகவும் கோபத்துடன் போரைத் துவக்கினார். அவருடன் துரோணர், துரியோதனன், பாஹ்லிகன் ஆகியோரும் சேர்ந்து பாண்டவப் படையைத் தாக்கினார்கள். இவர்களை எல்லாம் எதிர்க்க அர்ஜுனன் தன் படை முன் நின்றான். பீஷ்மர் அவனைத் தாக்கும்போது துரோணர், கிருபர் சல்லியன், விவிம்சதி, துரியோதனன் ஆகியோரும் சேர்ந்து கொண்டார்கள். அப்போது அபிமன்யு இவர்களில் சிலரை எதிர்க்கலானான். இந்தப் போரில் திருஷ்டத்யும்னனும் சேர்ந்து கௌரவர்களைத் தாக்கினான்.

சல்லியன் அப்போது திருஷ்டத்யும்னனை எதிர்க்கலானான். இருவரும் வெகுநேரம்வரை போர் புரிந்தனர். சல்லியன் சற்று விலகிச் செல்லவே அபிமன்யு அவனைத்தடுத்து எதிர்க்கலானான். அப்போது துரியோதனன், துச்சாதனன், துர்மர்ஷண், துஸ்சகன், துர்முகன், சித்திரசேனன் முதலானோர் அபிமன்யுவை சூழ்ந்து கொண்டார்கள். அது கண்டு பீமனும் திருஷ்டத்யும்னனும், உப பாண்டவர்களும், நகுலனும், சகதேவனும், கௌரவர்களைச் சூழ்ந்து கொண்டனர். பீமன் சல்லியனைத் தன் கதையால் தாக்கினான். துரியோதனன் யானைப் படையை பீமன் மீது ஏவி விட்டான். பீமன் தன் தேரிலிருந்து குதித்துத் தன் கதையாலேயே யானைகளை அடிக்கவே அவை பயங்கரமாகப் பிளிறிக் கொண்டு ஓடின. அது மாகதனின் யானைப் படை. தன் படை அழிவது கண்டு மாகதன் கோபம் கொண்டு மதம் பிடித்த ஒரு யானை மீதேறி தாக்கினான். அவனை எதிர்த்த அபிமன்யு அவனையும் அவனது யானையையும் தன் அம்புகளால் அடித்துக் கொன்றான். யானைகள் பயந்து ஓடியதில் கௌரவப் படையின் வீரர்கள் அவற்றின் கால்களின் கீழ் சிக்கி, மிதிபட்டு இறந்தனர்.

பாண்டவப் படை பீமனைக் காத்தவாறே கௌரவப் படையைத் தாக்கியது. கௌரவப் படைக்குப் பெருத்த சேதம் ஏற்பட்டது. அப்போரில் சாத்தியகியின் தாக்குதலைக் கௌரவர்களால் சமாளிக்க முடியவில்லை.



பூரிசிரவசு மிகவும் துணிச்சலுடன் அவனை எதிர்க்க வந்தான். அப்படியும் பாண்டவப் படையால் சமாளிக்க முடியவில்லை. அப்போரில் பீமன் திருதராஷ்டிரனின் புதல்வர்களான சுசேனன், ஜலசந்தன், வீரபாகன், பீமரதன், சுலோசனன் என்பவர்களைக் கொன்று தள்ளினான்.

இதைக் கண்ட பீஷ்மர் தன் மகாரதர்களிடம் பீமனைச் சூழ்ந்து கொண்டு தாக்குமாறு கட்டளை இட்டார். அப்போது நரகாசுரனின் மகனான பகதத்தன் ஒரு முரட்டு யானை மீதேறி பீமனைத் தாக்க வந்தான். அபிமன்யுவும் மற்றும் சிலரும் பகதத்தன் மீதும் அவனது யானை மீதும் அம்புகளை எய்து தாக்கினார்கள். பகதத்தன் காயமுற்ற தன் யானையை

பாண்டவப் படை மீது ஏவினான். அது மட்டுமல்ல, பீமனையே தாக்கி நினைவிழந்து விழச்செய்து விட்டான்.

அது கண்டு கடோத்கசன் கடும் கோபம் கொண்டு ஒரு யானை மீது ஏறி பகதத்தனை எதிர்க்கலானான். அந்தப் போர் மிகவும் பயங்கரமாக நடந்தது. அதில் பகதத்தனின் கை தாழ்ந்து போனது கண்டு அவனைக் காக்க துரோணரும் துரியோதனனும் ஓடி வந்தார்கள். கடோத்கசனுக்கு உதவியாக பாண்டவ வீரர்கள் விரைந்தனர். கடோத்கசன் போர் புரியும் முறை பீஷ்மருக்கு அருவருப்பை அளித்தது. அவர் துரோணரிடம் ''இந்த கடோத்கசன் வெற்றிக் களிப்பில் துள்ளுகிறான். அவனுக்கு உதவவும் பலமானவர்கள் இருக்கிறார்கள். நாம் களைத்துப் போய் விட்டோம். இன்றையப் போர் முடியும் நேரமும் வந்து விட்டது. எனவே போரை இத்துடன் நிறுத்துவோம்.'' என்றார்.

இது எல்லோருக்கும் ஏற்றதாக இருந்தது. எனவே கடோத்கசனின் தாக்குதலுக்கு ஆளாகாமல் போர்க்களத்திலிருந்து வெளியேறினார்கள். பாண்டவர்களும் போரை நிறுத்துவதற்கு அறிகுறியாக சங்கை ஊதினார்கள். வெற்றிக் களிப்பில் பீமனையும் கடோத்கசனையும் புகழ்ந்தவாறே யாவரும் தம் கூடாரங்களுக்குச் சென்றனர். தன் கூடாரத்திற்குப் போன துரியோதனனோ தன் தம்பிகள் சிலர் அன்றையப் போரில் இறந்து போயினரே என்று துக்கப்பட்டவாறே யோசனை செய்யலானான்.

சஞ்சயன் கௌரவர்களில் சிலர் இறந்ததை திருதராஷ்டிரனிடம் கூறவே அவன் ''சஞ்சயா! பாண்டவர்களை நினைத்தாலே எனக்கு பயமாக இருக்கிறது. விதுரன் கூறியது அப்படியே நடந்து விடுமோ? பாண்டவர்கள் மடியவும் என் மகன்கள் வெற்றிபெற்று வாழவும் வழியைச் சொல். பாண்டவர்களுக்கு தெய்வீக சக்தி உள்ளது. போலும்- ஆனால் கடவுள் ஏன் என்னை இப்படிக் கடுமையாக தண்டிக்க வேண்டும்?'' என்று புலம்பினான்.





# இருபசுக்களின் கதை

பொன்னைய்யன் ஒரு பசு மாட்டை வைத்துப் பால் கறந்து விற்று வாழ்ந்து வந்தான். அவன் கன்றுக் குட்டியைப் பால் குடிக்க விடாமலும், பசுவுக்குச் சரியாகத் தீவனம் வைக்காமலும் இருந்ததால் கன்றுக் குட்டி இறந்து போயிற்று. பசுமாடு இளைத்துத் துரும்பாகிப் போனது. தினமும் பாலைக் கறந்து கொண்டு பசுவை ஊரில் திரிந்து மேய்ந்து வர பொன்னையய்யன் அவிழ்த்து விட்டு விடுவான். மாலையானதும் அவன் பசுவைத் தேடிக் கண்டுபிடித்து வீட்டிற்கு இழுத்துச் செல்வான்.

ஒரு நாள் பசுவிடமிருந்து பாலைக் கறந்துவிட்டு பொன்னையய்யன் அதை மேய அவிழ்த்து விட்டான். பசுவும் ஊருக்குள் போனது. மாலையானது. பொன்னையய்யன் தன் பசுவைத் தேடிக் கொண்டு சென்றான். ஆனால் அது எங்கும் தென்படவில்லை. அதனால் அவன் கிராம அதிகாரியிடம் போய்ப் புகார் கொடுத்தான். கிராம அதிகாரியும் ''நான் ஊர்க் காவலர்களை விட்டுத் தேடச் சொல்கிறேன். நாளைக் காலையில் வந்து என்னைப் பார்'' என்று கூறி அனுப்பினார்.

மறுநாள் காலை பொன்னையய்யன் கிராம அதிகாரியின் வீட்டிற்குப் போனபோது கருப்பு நிறப் பசு ஒன்று வாசலில் கட்டப்பட்டிருந்தது. கொழு கொழுவென்று இருந்தது. கிராம அதிகாரி வந்து பொன்னைய்யனிடம் ''நீ உன் பசு கருப்பு நிறம் என்றுதானே சொன்னாய். இதுதான் உன் பசுவா என்று பார்'' என்று கூறினார். பொன்னையய்யன் அதைப் பார்த்துத்தன் மனதில் ''என் பசுவோ நோஞ்சான். இது கொழுக்கென்று நன்கு பருத்து இருக்கிறது. இதையே என் பசு என்று கூறி ஓட்டிக் கொண்டுபோய் விடுகிறேன்'' என்று எண்ணி அவரிடம் ''ஆமாம். இதுதான் என் பசு'' என்று கூறினான். கிராம அதிகாரியும் ''சரி, ஓட்டிக்

காரை ரம்யா

கொண்டு போ'' என்றதும் பொன்னையனும் அதனை அவிழ்த்துத் தன் வீட்டிற்கு ஓட்டிக் கொண்டு சென்றான்.

வீட்டிற்குப் போனதும் தான் அது கறவை மாடு இல்லை என்றும் மடி வற்றிப் போன மாடு என்றும் அவன் தெரிந்து கொண்டான். அது தன் மாடு இல்லை என்று கிராம அதிகாரியிடம் சொல்வது அவமானம். எனவே அந்தப் பசுவை வீட்டினுள் கட்டிப் போட்டு தீவனம் போடாமல் இருந்தான். அதனால் அது இளைத்து எலும்புக்கூடாக ஆகி விட்டது.

இரண்டு நாட்களாகத் தன் பசுவைக் காணவில்லை என்று சின்னையன் என்பவன் கிராம அதிகாரியிடம் புகார் செய்தான். அவரும் ஊர்க்காவலாளர்களை விட்டுத் தேடச் சொல்லவே அவர்களுக்குப் பொன்னையனின் பசு கிடைத்தது. அதை அவர்கள் ஓட்டி வந்து கிராம அதிகாரியிடம் ஒப்படைத்தார்கள். கிராம அதிகாரி சின்னையனைக் கூப்பிட்டு அந்தப் பசுவைக் காட்டி ''இதுதானா உன் பசு?'' என்று கேட்டார்.

சின்னையனும் தன் மனதில் ''என் வீட்டில் பசுவே இல்லை. இதையும் விட்டுவிட்டால் ஒன்றுமே இல்லாது போய்விடும். இளைத்து ஒல்லியாக இருந்தாலும் பரவாயில்லை. ஓட்டிக் கொண்டு போய் விடுகிறேன்'' என எண்ணி அவரிடம் ''ஆமாம் என் பசுதான்'' எனவே கிராம அதிகாரி பசுவை அவனிடம் கொடுத்தார். அவனும் பசுவைத் தன் வீட்டிற்கு ஓட்டிச் சென்றான். சின்னையன் அதற்கு தினமும் நல்ல தீவனம் வைக்கவே, அதுவும் அதைத் தின்று நன்கு பருத்து விட்டது. மூன்று மாதங்கள் இப்படியே



கழிந்தன.

பொன்னைய்யனுக்குத் தன் பசு தான் சின்னைய்யனிடம் இருக்கிறது என்பதும் அவன் பசு தன்னிடம் வந்து விட்டது என்பதும் தெரிந்து விட்டது. அதனால் அவன் சின்னைய்யனைக் கண்டு ''என் பசு உன்னிடமும் உன் பசு என்னிடமும் வந்து விட்டது. அவற்றை நாம் மாற்றிக் கொண்டு விடலாம்'' என்றான். சின்னைய்யனோ ''அதெல்லாம் எனக்குத் தெரியாது. அப்படி ஏதாவது தவறு நடந்திருக்கிறது என்றால் நீ போய் கிராம அதிகாரியிடம் புகார் செய். அவர் விசாரிக்கட்டும்'' என்று கூறி விட்டான்.

பொன்னைய்யனும் கிராம அதிகாரியிடம் புகார் செய்யவே சின்னைய்யனும் ''என்னிடம் இருப்பது என் பசுதான். அது 'கொழு' 'கொழு' என்று இருப்பதால் ஒல்லிப் பசுவை என் தலையில் கட்டப் பார்க்கிறான்'' என்றான். கிராம அதிகாரியும் ''சரி சரி முதலில் அந்த இரண்டு பசுக்களும் இங்கே வரட்டும். அதன் பிறகு தீர்ப்பு கூறுகிறேன்'' என்றார். இரு பசுக்களும் ஓட்டிக் கொண்டு வரப்பட்டன.

அப்போது கிராம அதிகாரி பொன்னைய்யனிடம் ''நீ சின்னைய்யனிடமுள்ள பசுவை உன் பசு என்கிறாய். அப்படியானால் நீயே அதைப் பிடித்துக் கொண்டு நட பார்க்கலாம்'' என்றார். பொன்னைய்யனும் நன்கு பருத்து வளர்ந்த பசுவினருகே சென்றான். அது தன்னைப் பட்டினி போட்டு வாட்டிய அவனைக் கண்டு சீறியது. பொன்னைய்யன் அதைப் பிடிக்க முயலவே அது தன் கொம்புகளால் அவனை முட்டித் தள்ளியது. அவன் தூரப் போய் விழுந்தான்.

கிராம அதிகாரியும் ''பொன்னைய்யா! இது உன் பசு அல்ல. அதுவே அதைத் தெரிவித்து விட்டது. நீ அந்த ஒல்லிப் பசுவையே ஓட்டிக் கொண்டு போ. வீணாசைப்படாதே'' என்றார். பொன்னைய்யன் மறு பேச்சுப் பேசாமல் தான் வளர்த்து வந்த ஒல்லிப் பசுவை ஓட்டிக் கொண்டு தலை குனிந்தவாறே சென்றான்.







































Amul
The Taste of India

Marketed by Gujarat Co-operative Milk Marketing Federation Limited, Anand 388 001. E-mail: cheese@amul.com For FREE home delivery of our products in select cities visit the Amul Cyberstore at www.amul.com

daCunha/ACS/2/2000



# அம்புலிமாமா

## பாரத தரிசனம் வாசகர்களுக்குப் போட்டி

இந்த இதழிலுள்ள கேள்விகளின் விடைகள் அடுத்த இதழில் பிரசுரிக்கப்படும். அதற்குள் நீங்களே விடைகளை அறிய முயன்று பாருங்கள்.

## 1



அ) பூமி சூரியனைச்சுற்றி வருகிறது என்று கோபர்னிகஸ் சொன்னதற்கு ஆயிரம் ஆண்டுகள் முன்பே ஒரு இந்திய விஞ்ஞான அறிஞர்கூறினார். அவர்யார்?

ஆ) நம் நாட்டில் ஓரிடத்திலுள்ள சிவலிங்கம் தன் உருவை அவ்வப் போது சரிசெய்து கொண்டும் மறைந்தும் மீண்டும் தோன்றி யும் வருகிறது. அது எங்கே உள்ளது?

இ) எமதர்மனைக்கண்டு மரணத்திற்குப் பின் ஆத்மா என்ன ஆகிறது என்று தெரிந்து கொண்ட புராணகாலச்சிறுவன் யார்?

ஈ) பழங்கால பாரதத்தில் இருந்து புகழ் பெற்ற மூன்று நாத்திகத்தத்துவ ஞானிகள் யார்?

உ) புதிய மதக் கொள்கையை வகுத்து அதற்கு முக்கியத்துவம் கொடுத்தும் அதைப்பரப்ப முடியாமல் போன சக்ரவர்த்தி யார்?

## 2

பழங்காலத்தில் முனிவர்கள் காடுகளில் வசித்து வந்தார்கள். வயதிற்கு வந்த ஒரு முனிவர் புதல்வன் வேறொரு முனிவரின் மகளை நேசித்தான். அவளும் அவனை மிகவும் விரும்பினாள். அவர்களது பெற்றோர்களும் அவர்களுக்கு விரைவிலேயே திருமணம் செய்து வைக்கவும் எண்ணினார்கள். ஆனால் முனிவரின் புதல்வியை ஒரு நல்ல பாம்பு தீண்டி விடவே அவள் இறந்து போனாள். துயரக் கடலில் மூழ்கிய முனிவரின் புதல்வன் மன்மதனின் உதவியால் எமலோகம் சென்று எமனைக் கண்டான். அவன் எமனிடம் தன் ஆயுளில் பாதியை இறந்து போன முனிவர் புதல்விக்குக் கொடுத்து விடுவதாகவும் அவளை உயிர்ப்பித்துத்தருமாறும் வேண்டினான். எமதர்மனும் அவனது கோரிக்கையை ஏற்று முனிவர் புதல்வியை உயிர்ப்பித்துத் தந்தான். அந்த முனிவர் புதல்வன் யார்? முனிவர் புதல்வி யார்?



காவேரிபாயும் பகுதியிலுள்ளது வைத்தீஸ்வரன் கோவில். இவ்வூர் கோவிலுக்கும், அகஸ்திய நாடி சோதிடத்திற்கும் புகழ் பெற்றது. இங்கு கோவில் கொண்டுள்ள ஈசுவரர் வைத்தியர்களுக்கெல்லாம் தலைவராகக் கருதப்படுகிறார். இங்குள்ள




## காவேரிக் கரைஓரமாய்...11

# பயணத்தின் முடிவு

கருத்து : ஜெயந்தி மகாலிங்கம்   ஓவியம் : கௌதம் சென்

அகஸ்திய நாடி சோதிடர்களோ தங்களிடம் ஓலைச் சுவடிகள் இருப்பதாயும் ஒருவரது கைரேகையைக் கொண்டு இச்சுவடியைப் பார்த்து அவரது குடும்ப வரலாற்றையும் அவரது எதிர்காலத்தையும் கூறு கிறார்களாம். இந்த ஓலைச் சுவடிகளை பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் அகஸ்திய முனிவர் எழுதி வைத்து விட்டுப் போனதாக இச் சோதிடர்கள் கூறி வருகிறார்கள். இதில் ஓரளவு உண்மை இருக்கலாம். ஆனால் இச் சோதிடர்களில் பலர் கூறுவதை நம்ப முடியாது என்ற கருத்தும் நிலவுகிறது.



சிதம்பரம் நடராஜர் ஆலயம்

சிதம்பரத்திற்கும் வைத்தீஸ்வரன் கோவிலுக்குமிடையில் தான் சீர்காழி என்ற சிவஸ்தலம் உள்ளது. இங்கு தேவாரம் இயற்றிய மூவருள் ஒருவரான ஞானசம்பந்தர் பல நூற்றாண்டுகளுக்கு முன் பிறந்தார். பார்வதி தேவி வந்து இவருக்கு மூன்று வயதிருக்கும் போதே



நாளைப் போவார் நந்தனார்
சிதம்பர ஆலயத்தின் முன்

ஞானப்பால் ஊட்டி ஈசன் புகழைப் பாட வைத்தாராம்.

காவேரியின் கிளை நதியான கொள்ளிடத்திலிருந்து சற்று தூரத்தில் சிதம்பரம் என்ற ஊர் உள்ளது. இங்குள்ள நடராஜர் ஆலயம் உலகப் புகழ் பெற்றது. பஞ்ச பூதங்களில் ஒன்றான அம்பரம் என்னும் ஆகாசத்தின் அம்சமாய் இங்கு கோவில் கொண்டுள்ள ஆகாசலிங்கம் திகழ்கிறது. இங்கு சிவனை நடராஜரின் வடிவிலும் ஆராதிக்கிறார்கள். சிவனாரும் பார்வதியும் இங்கு போட்டி போட்டுக் கொண்டு நடனம் ஆடினார்க ளாம். சிவனார் ஊர்த்துவ தாண்டவம் என்ற நடனம் ஆடி அதில் தம் பாதத்தின் கட்டை விரலைத் தம் தலையில் தொட்ட நிலையில் இருந்தார் பெண்ணாகிய பார்வதியார் அவ்வாறு செய்ய வெட்கப் பட்டு பேசாமல் நிற்கவே அவருக்குத் தோல்வி ஏற்பட்டதாம்.

இக்கோவிலின் நாற்புற கோபுரங்களில் 108 பரத நாட்டிய நிலைகள் செதுக்கப்பட்டுள்ளன. இக் கோவில் எப்போது கட்டப்பட்டது எனச் சரியாகக் கூற முடியவில்லை. சோழமன்னர்கள் இக்கோவிலின் கூரையைத் தங்கத்தால் மூடி சிறப்பித்தார்கள். பாண்டிய, நாயக்க மன்னர்கள் இக்கோவிலுக்கு ஏராளமான மானியங்களை அளித்தனர்.

சிதம்பரம் என்றால் உடனே நம் நினைவிற்கு வருபவர் சிவ பக்தர் நந்தனார். நாயன்மார்களில் ஒருவராய்க் கருதப்படும் இவர் சிதம்பரத்தின் அருகேயுள்ள ஆதனூர் என்ற கிராமத்தில் தாழ்குலத்தில் பிறந்தவர். அவர் சிறுவயது முதலே சிதம்பரத்திற்குப் போய் நடராஜப் பெருமானைத் தரிசிக்க ஆசை கொண்டார். அவர் தினமும் 'நாளை சிதம்பரத்திற்குப் போவேன்' என்று எல்லோரிடமும் சொல்லிக் கொண்டே இருந்ததால்

அவரை ''நாளைப் போவார்'' என்று எல்லோரும் பெயரிட்டு அழைக்கலானார்கள். முடிவில் ஒருநாள் சிதம்பரத்திற்குச் சென்றார். ஆனால் தாழ்குலத்தில் பிறந்த காரணத்தால் கோவிலுக்குள் செல்ல முடியாமல் வெளியிலேயே நின்றார். சிவபிரான் கோவில் அர்ச்சகர்களான தில்லைவாழ் தீட்சிதர்கள் கனவில் தோன்றி நந்தனைத் தம்மிடம் அழைத்து வரும்படிக் கூறினார். அவர்களும் அவ்வாறே செய்ய அவர்களின் கண் முன்னாலேயே நந்தனார் சிவபிரானோடு ஜோதியாகி ஐக்கியமாகி விட்டார்.

காவேரி மிகவும் குறுகி பூம்புகார் அருகே வங்கக் கடலில் சங்கமமாகிறது. குடகிலிருந்து இதுவரை அதன் நீளம் 765 கி.மீ. சோழ நாட்டின் பழங்காலத் துறை முகமான காவேரிப் பூம்பட்டினம் தான் பூம்புகார். கி.பி இரண்டாவது நூற்றாண்டுவரை புகழுடன் விளங்கிய இந்நகரைக் கடல் விழுங்கி விட்டது. பழங்காலத்தில் ரோமா புரியுடன் வர்த்தகம் செய்த இத்துறைமுகத்தின் இடிந்த பகுதிகளை தொல்பொருள் ஆய்வுத் துறையினர் கண்டு பிடித்துள்ளனர். இதனருகே பல்லவனீஸ்வரம் என்ற இடத்தில் ஒரு பௌத்த விஹாரமும் இருந்ததும் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது.

ஏழுமாடி சிலப்பதிகாரக் கலைக் கூடம் 1970ல் நிர்மாணிக்கப்பட்டது. இதில் இளங்கோ அடிகள் இயற்றிய சிலப்பதிகாரத்தில் வரும் காட்சிகளை சிற்ப வடிவங்களில் காணலாம். சிலப்பதிகாரம் பூம்புகாரில் வாழ்ந்த பணக்கார வியாபாரி கோவலனுடையதும், அவனது மனைவி கண்ணகியினுடையதுமானவர்களின் கதை.

கோவலன் மாதவி என்னும் நாட்டியமாதின் அழகில் மயங்கித் தன் செல்வத்தையும் நேரத்தையும் செலவு செய்து விடுகிறான். அவனது மனைவி கண்ணகி அவன் மனம் திருந்தி வீட்டிற்கு வருவான் எனக் காத்திருக்கிறாள். செல்வத்தை முற்றிலும் இழந்த



சிதம்பர ஆலயத்தின் தெய்வம் நடராஜர்




கோவலன் வீட்டிற்கு வருகிறான். அவ்வூரில் இருக்க மனம் இல்லாமல் அவன் தன் மனைவியை அழைத்துக் கொண்டு மதுரைக்குச் செல்கிறான். அங்கு வியாபாரம் செய்வதற்காகப் பணம் திரட்டத் தன் மனைவியின் கால் சிலம்பு ஒன்றைக் கோவலன் எடுத்துப் போய் ஒரு பொற்கொல்லனைச் சந்திக்கிறான். பொற்கொல்லன் அது போல ராணி அணிந்திருந்த ஒரு சிலம்பைத் திருடியவன். அவன் கோவலன் தான் ராணியின் சிலம்பைத் திருடியவன் எனக் கூறி மன்னன் முன் கொண்டு போய் நிறுத்துகிறான். மன்னனும் தீர விசாரியாமல் கோவலனைக் கொல்லக் கட்டளை இடவே கொலையாளிகள் அவனைக் கொன்று விடுகிறனர். கண்ணகி இது கேட்டுக் கோபமடைந்து பாண்டியனின் அரச சபைக்குச் செல்கிறாள். அங்கு மன்னனிடம் ராணியின் சிலம்பில் இருந்தது என்ன கற்கள் எனக் கேட்க அவன் முத்துக்களே என்றான். கண்ணகி தன் சிலம்புகளில் மாணிக்கங்கள் உள்ளன எனக் கூறி தனது இரு சிலம்புகளை உடைத்தாள். அவற்றிலிருந்து மாணிக்க கற்கள் சிதறின. அது கண்டு பாண்டிய மன்னன் தான் அநீதி இழைத்து விட்டது கண்டு உயிர் துறக்க அவனது மனைவியும் அதே சமயம் இறக்கிறாள். கண்ணகி தனக்கு இழைக்கப்பட்ட அநீதிக்காகக் கோபம் கொண்டு மதுரை நகரையே எரித்து விடுகிறாள். காவேரி நதி கடலில் கலப்பது போல கண்ணகி மேலுலகில் தன் கணவனோடு சேரத் தேரில் அமர்ந்து அவ்வுலகை அடைகிறாள்.


பூம்புகார் காவேரி கடலில் கலப்பது

# ஆக்கபூர்வமான போட்டிகள்

பிரசுரிக்கத் தகுந்ததெனத் தேர்ந்தெடுக்கப்பட்ட மே மாதக்கதை

# ஏன் பேசவில்லையா!

அந்த ஊர்த்திருமணத்திற்கு வந்த மாப்பிள்ளை வீட்டார் தங்கி இருந்த வீட்டில் அங்கிருந்த பெண்களின் நகைகளெல்லாம் திருட்டு போய் விட்டது. ஆனால் கிராம அதிகாரியும் ஊர்க்காவலாளிகளும் சேர்ந்து திருடர்களைப்பிடித்ததோடு நகைகளையும் மீட்டு விட்டனர்.

மாப்பிள்ளை வீட்டார் கிராம அதிகாரிக்கு நன்றி சொல்லவே, அவரும் ''எங்கள் ஊருக்குக் கல்யாணத்திற்கு வந்து நீங்கள் உங்கள் நகைகளை திருட்டுக் கொடுத்தீர்களென்றால் அது எங்களுக்குத் தானே அவமானம்! நல்ல வேளையாக உங்கள் நகைகளெல்லாம் கிடைத்து விட்டன. அதனால் நீங்கள் ஒவ்வொருவராக வந்து உங்கள் நகைகளின் அடையாளங்களைக் கூறுங்கள். நானும் சரி பார்த்து விட்டு நகைகளை உங்களிடம் ஒப்படைக்கிறேன்'' என்றார்.

மாப்பிள்ளை வீட்டின் பெண்களும் ஒவ்வொருவராக வந்து கிராம அதிகாரியிடம் தங்கள் நகைகளைப் பற்றிய அடையாளங்களைக் கூறினார்கள். கிராம அதிகாரியும் அவர்கள் கூறிய அடையாளங்களைக் கொண்டு அவர்களது நகைகளை எடுத்துக்காட்டி 'இது தானா உங்கள் நகை?'' என்று கேட்டு அவர்கள் ஆம்' என்று சொன்ன பின் அந்த நகைகளை ஒப்படைத்து வந்தார். முடிவில் ஒரு நகை மட்டும் மிஞ்சியது.

அவர் அந்த நகை யாருடையது என்று யோசித்துக் கொண்டிருககையில் வேலுசாமி என்பவன் அவரிடம் வந்து ''நீங்கள் இந்த நகை யாருடையது என்று தானே யோசித்துக் கொண்டிருக்கிறீர்கள்? இது அதோ உட்கார்ந்திருக்கும் முத்துலட்சுமியினுடையது. அவள் நேற்று இதை அணிந்து கொண்டு தன்னுடைய நகை என்று கூறி எல்லோரிடமும் காட்டிக் கொண்டிருந்தாள்'' என்றான்.

கிராம அதிகாரி அவளைக் கூப்பிட்டு அவளது நகையின் அடையாளங்களைக் கூறச் சொன்னார். அவளோ எதுவும் கூறாமல் கண்ணீர் வடிக்கலானாள். கிராம அதிகாரி மீண்டும் மீண்டும் கேட்க அவள் எதுவும் சொல்லாமல் கண்ணீர் வடிக்கலானாள். கிராம அதிகாரியும் ''நீ பேசமாட்டாயா?'' என்று கேட்டார்.

அப்போது முருகப்பன் என்பவன் அவர் முன் வந்து ''ஐயா! இவள் என் மனைவி இவளால் எதுவும் சொல்லமுடியாது. ஏனென்றால் அடுத்த வீட்டுக்காரியின் நகையை இரவல் வாங்கிப் போட்டுக் கொண்டு வந்தாள். அதனால் அது பற்றிய விவரங்களை சொல்ல இவளால் முடியாது. ஏனெனில் இவளுக்குத் தெரியாது. நான் அப்போதே இரவல் நகை வாங்காதே என்று தலையில் அடித்துக் கொண்டேன். இவள் கேட்டால் தானே'' என்றான்.

கிராம அதிகாரியும் இனிமேல் இரவல் நகை வாங்கிப் போட்டுக் கொள்ளாதே'' என்று அறிவுரைகூறி நகையை அவளிடம் கொடுக்க, அவளது முகம் மலர்ந்தது!



# அது உன் தவறே!

கனகரத்தினம் கருப்பூரில் நேர்மை நாணயம் தவறாத வியாபாரி. அவருக்குத் திருமணமான பின் இருமகன்கள் பிறந்தனர். ஆனால் அவரது மனைவி திடீரென்று இறந்துவிட்டாள். அதன் பின் அவர் தன் மகன்களை எப்படி வளர்ப்பது என்று யோசிக்கலானார். தன் மைத்துனரிடம் கொண்டு போய் விடுவது என அவர் தீர்மானித்தார். அந்த மைத்துனன் இருக்குமிடம் கருப்பூரிலிருந்து இருநூறு மைல் தூரத்தில் இருந்தது.

ஊரை விட்டுப் போகுமுன் தன் மனைவியின் தங்க நகைகளைத் தன் வீட்டில் வைத்துவிட்டுப் போனால் திருட்டுப் போய்விடுமென்று எண்ணி அவன் அவற்றை எடுத்துக் கொண்டு அவ்வூரில் பெரிய பணக்காரனான அருணாசலத்தைக் கண்டு ''நான் இரண்டொரு மாதங்களுக்கு ஊரில் இருக்கமாட்டேன். அதனால் என்னிடமுள்ள தங்க நகைகளை உங்களிடம் கொடுத்து விட்டுப் போகிறேன். ஊர் திரும்பியதும் வந்து வாங்கிக் கொள்கிறேன்'' என்றான். அருணாசலமும் ''கவலைப்படாதீர்கள். நகைகளை பத்திரமாக வைத்திருந்து நீங்கள் திருப்பி வந்ததும் கொடுக்கிறேன்'' என்றான்.

கனகரத்தினம் தன் இருமகன்களையும் தன் மைத்துனன் ஊருக்கு அழைத்துக் கொண்டு போய் விட்டு விட்டு மூன்று மாதங்களுக்குப் பின் தன் ஊருக்கு வந்தார். அவர் அருணாசலத்தைக் கண்டு தன் நகைகளை வாங்கிக் கொண்டு தன் வீட்டிற்கு வந்தார். அங்கு அந்த நகைகளைப் பார்த்தபோது அவை தான் கொடுத்த தங்க நகைகள் அல்ல என்றும் தங்கமுலாம் பூசப்பட்ட போலி நகைகள் என்றும் தெரிந்து கொண்டார். அதனால் மனம் உடைந்து போய்த் தன் மைத்துனனின் ஊருக்குப் போய்த் தன் இருமகன்களிடமும் அருணாசலம் செய்த மோசடியைக் கூறி உயிர்விட்டார்.

- பாபநாசம் சாமா -

அந்த இருமகன்களும் தம் தந்தையின் மரணத்திற்குக் காரணமாக இருந்த அருணாசலத்தைப் பழிவாங்கத் தீர் மானித்தார்கள். இருவரும் பெரியவர் களானதும் ஒரு திட்டம் தீட்டினார்கள். அதன் படி மூத்தவன் ஒரு யோகியாகவும் இளையவன் பணக்கார ஜமீன்தாரர் போலவும் வேடம் பூண்டு கருப்பூரை அடைந்தார்கள்.

யோகி அவ்வூருக்கு வெளியே குடில் அமைத்து இருந்தார். ஜமீன்தாரர் அருணாசலத்தின் வீட்டின் எதிரே இருந்த மாளிகையை வாடகைக்கு அமர்த்திக் கொண்டு பகட்டாக வாழலானார். ஏராளமான தானதர்மங்கள் செய்தார். அது கண்டு அருணாசலம் மூக்கின் மேல் விரலை வைத்து பிரமித்தான். அவன் அந்த ஜமீன்தாரரைக் கண்டு நட்பு கொண்டு நெருங்கிப் பழகலானான்.

ஒரு நாள் நள்ளிரவில் ஜமீன்தாரர் திருடன் திருடன் என உரக்கக் கத்தவே அருணாசலமும் இன்னும் சிலரும் ஓடி வந்தனர். ஜமீன் தாரரும் அவர்களிடம் ''சில திருடர்கள் என் படுக்கை அறைக் குள் வந்து தங்க ஆபரணப் பெட்டியை எடுத்துச் செல்ல முயன்றார்கள். ஆனால் நான் அவர்களை அடிக்கவே, பயந்து ஓடிவிட்டார்கள்'' என்றார்.

அப்போது அருணாசலம் ஜமீன்தாரரி டம்'' நீங்கள் உங்கள் உடமைகளை என் வீட்டில் பத்திரமாக வைத்து விடுங்கள். அங்கே ஒரு திருடன் கூட நுழைய



முடியாது'' என்றான். ஜமீன்தாரரும் அப்படியே செய்தால் போயிற்று என்றார். மறுநாளே ஜமீன்தாரரின் வேலையாட்கள் தங்க நகைகளுள்ள இரும்புப் பெட்டி களை அருணாசலத்தின் வீட்டில் கொண்டு போய் வைத்தார்கள். ஜமீன்தாரருக்கு ஒரு பெரிய அறையை அருணாசலம் ஒழித்துக் கொடுக்கவே அவர் தாம் வாடகைக்கு இருந்த மாளிகையைக் காலி செய்து விட்டு அருணாசலத்தின் வீட்டிற்கு வந்து விட்டார்.

ஒரு வாரம் கழிந்தது. ஜமீன்தாரர் உடல்நலம் குன்றி உணவு உண்ண வில்லை என்று அருணாசலத்திடம் அவனது வேலைக்காரர்கள் கூறினார்கள். அருணாசலம் பதறிப்போய் ஜமீன்



தாரரைக் கண்டு'' என்ன உடம்புக்கு?'' என்று கேட்டான். அவரும் ''சில வருடங்களுக்கு முன் ஒரு பெரிய பாவம் செய்துவிட்டேன். அதன்பலன்தான் இது நேற்றிரவு கடவுள் கனவில் தோன்றி ''உன் சொத்தை எல்லாம் இவ்வூர் எல்லையிலுள்ள யோகிக்கு தானம் செய்துவிடு'' என்றார். அதனால் நீங்கள் போய் அந்த யோகியை அழைத்து வருகிறீர்களா?'' என்று படுத்திருந்த படியே கேட்டார். அந்த யோகியைப் பற்றி நல்லவிதமாக அருணாசலம் கேட்டிருந்ததால் அவரை அழைத்து வந்தான். ஜமீன்தாரரும் தம் தங்கத்தை எல்லாம் அவருக்கு தானமாகக் கொடுப்பதாகக் கூறவே, யோகியும் ''எனக்குத் தங்கமும் மண்ணும் ஒன்றுதான். யார் எதைக் கொடுத்தாலும் அதை மக்களின் நலத் திற்கே பயன்படுத்துவேன்'' என்றார்.

அப்போது அருணாசலத்தின் மூளை வேகமாகச் செயல்பட்டது. அவன் யோகியிடம் ''இவர்தானமாகக் கொடுக்கும் தங்க நகைகளை நான் தங்களுக்கு அதன் விலையைக் கொடுத்து வாங்கிக் கொள்கிறேன்'' எனவே யோகியும் அதற்குச் சம்மதித்தார். அருணாசலம் அவற்றை மிகமிகக் குறைவாக மதிப்பிட்டு யோகியிடம் பணத்தைக் கொடுக்க அவர் அதை வாங்கிக் கொண்டு போய்விட்டார்.

மலிவாக ஏராளமாக தங்க நகைகளை வாங்கி விட்டதாக எண்ணி அருணாசலம் ஓரேடியாக மகிழ்ந்து போனான். ஆனால் அந்த விலை கொடுக்கதன் வீடு, வயல்களை எல்லாம் விற்க வேண்டியதாயிற்று. சில நாட்கள் கழித்து அந்நகைகளை ஒரு பொற் கொல்லனிடம் காட்டி ''இவை எவ்வளவு லட்சம் பெறும்? ஐம்பதா அல்லது எண்பதா?'' என்று கேட்டான். பொற்கொல்லனும் அவற்றைப் பார்த்துவிட்டு ''இவை தங்க மூலம் பூசப்பட்ட போலி நகைகள். ஐம்பது ரூபாய் கூடப் பெறாது'' என்றான்.

அது கேட்டு அருணாசலம் ஆத்திரம் கொண்டு மன்னனிடம் போய் தன்னை ஒரு ஜமீன்தாரரும் யோகியும் போலி நகைகளைக் கொடுத்து ஏமாற்றி

விட்டதாகக் புகார் கொடுத்தான். மன்னனும் அவன் குறிப்பிட்ட ஜமீன் தாரரையும் யோகியையும் அழைத்து வரச் சொல்லி அவர்கள் வந்ததும் அருணாசலத்தின் புகாரைக் கூறி விசாரித்தான்.

ஜமீன்தாரரோ ''நான் எதுவும் அருணாசலத்திற்குக் கொடுக்கவில்லை என் நகைகளை எல்லாம் எப்படி இருந்தனவோ அப்படியே யோகிக்கு தானம் கொடுத்துவிட்டேன்'' என்றார். யோகியோ ''எனக்கு தங்கம் பற்றி எதுவும் தெரியாது. தங்கமும் மண்ணும் எனக்கு ஒன்றுதான் என இந்த அருணாசலத்திடம் கூறினேன். மேலும் நகைகளை நான் இவனுக்கு விற்கவில்லை. இவன்தான் அவற்றை வாங்கிக் கொள்வதாகக் கூறி இவனே அவற்றின் விலையை மதிப்பிட்டுப் பணத்தைக் கொடுத்தான். நானும் என் வழக்கப்படி அந்தப் பணத்தை ஏழை எளியவர்களுக்குக் கொடுத்து விட்டேன்'' என்றார்.

மன்னனும் ''அருணாசலத்திடம் ஜமீன்தாரர் உனக்கு எதுவும் கொடுக்கவில்லை. எனவே அவர் உன்னை ஏமாற்றவில்லை. யோகியோ நகைகளை தானமாகப் பெற்றார். அவை தங்க நகைகளா அல்லது பித்தளை நகைகளா என்று அவருக்குத் தெரியாது. நீதான் அவற்றை வாங்கிக் கொள்வதாகக் கூறி அதற்கு மதிப்பு போட்டு பணத்தைக் கொடுத்தாய். எனவே, அவர் நகைகளை உனக்கு விற்றார் என ஏற்க முடியாது. அவர் உன்னை ஏமாற்றவில்லை. நகை களை வாங்கும் நீதான் அவற்றைப் பரிசோதித்து அவை தங்கமா அல்லது பித்தளையா என்று பரீட்சித்துப் பார்த் திருக்க வேண்டும். நீ அதைச் செய்யத் தவறிவிட்டாய். இதற்குக் காரணம் நீ மிகக் குறைந்த விலையில் தங்க நகைகளை அடைய ஆசைப்பட்டதே. எனவே அவர்கள் உன்னை ஏமாற்றவில்லை. நீ உன்னையே தான் ஏமாற்றிக் கொண் டாய்'' என்று தீர்ப்பை அளித்தார்.

அருணாசலம் என்ன செய்வது என்று தெரியாமல் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு போனான்!.



# போட்டோ வாக்கியப் போட்டி

தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும்.



போட்டோ
வாக்கியப்
போட்டி
அம்புலிமாமா
வடபழனி
சென்னை-600 026.





போட்டிக்கான தலைப்புகளை தபால் கார்டில் எழுதி செப்டம்பர் 25-ம் தேதிக்குள் மேலே உள்ள முகவரிக்கு வந்து சேருமாறு அனுப்ப வேண்டும். போட்டியில் வெற்றி பெற்ற தலைப்புகள் நவம்பர் 2000 மாத இதழில் வெளியிடப்படும். சிறந்த தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு

## வாழ்த்துக்கள்

ஜூலை 2000 போட்டியில்
பரிசு பெற்றவர் :



கே. சத்தியமூர்த்தி
46, நேதாஜி தெரு,
கணேஷ்நகர்,
சென்னை - 600 073.



**பரிசு பெற்ற தலைப்புகள்**

முதலாவது போட்டோ : எட்டப் போனால் கிட்டுமா?
இரண்டாவது போட்டோ : கிட்டப் போனால் எட்டுமா?


அம்புலிமாமா ஆண்டு சந்தா
இந்தியாவில் ரூ. 120.00

Payment in favour of CHANDAMAMA INDIA LIMITED for details address your enquiries to:
Publication Division, Chandamama Buildings, Vadapalani, Chennai–600 026

SUBSCRIPTION AGENTS INVITED.

Contact Circulation Manager, CHANDAMAMA INDIA LTD,
Chandamama Bldgs., Vadapalani, Chennai - 600 026.

